# கார்க்கி கட்டுரைகள்

தமிழாக்கம் :

வல்லிக்கண்ணன்



நெல்லை பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட்,

திருநெல்வேலி.

# முன்னுரை

மாக்ஸிம் கார்க்கியின் கதை எழுதும் ஆற்றல் பற்றித் தமிழ் நாட்டினர் நன்கு அறிவர். நாவல் இலக்கியத்துக்கு அவர் செய்துள்ள சேவை பற்றித் தமிழ் அன்பர்கள் அறிவார்கள். கட்டுரை இலக்கியத்தில் அவருடைய சாதனைகளை இங்குள்ளவர்கள் நன்கு தெரிந்துகொள்ள வாய்ப்பளிக்கும் மொழி பெயர்ப்புக்கள் அதிகமாக இதுவரை வெளிவரவில்லை.

கார்க்கி எவ்வளவோ கட்டுரைகள் எழுதியிருக்கிறார். தனது இலக்கியக் கொள்கைகளை விளக்கவும்—விமர்சகர்களுக்குப் பதில் அளிக்கவும் — சோவியத் ரஷ்யாவின் வளர்ச்சியையும் சாதனைகளையும் சுட்டிக் காட்டவும்—தன் நாட்டைக் குறை கூறியவர்களுக்கும், பரிகசித்தவர்களுக்கும், கண்டித்தவர்களுக்கும் — தன் நாட்டு எழுத்தாளர்களுக்கு அறிவுத் தெளிவு ஏற்படுத்தவும் – உலக எழுத்தாளர்களுக்கு உண்மை ஒளியை உணர்த்தவும்—இளம் எழுத்தாளர்களுக்கு வழி காட்டவும் அவர் கட்டுரைகள் எழுதினார்.

கார்க்கியின் நடையின் காம்பீர்யமும், சொல்லின் கூர்மையும், கருத்துச் செறிவும், அவற்றோடு தாராளமாகக் கலந்துள்ள கிண்டலும் கேலியும் நம் கவனத்தைக் கவர்கின்றன.

கார்க்கியின் சிந்தனைச் செல்வத்தைத் தமிழில் தரும் பணியை நிறைவேற்றுவதில் எனக்கு நெல்லை பப்ளிஷிங் ஹவுஸ் பங்கு அளித்ததற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன்; பெருமை கொள்கிறேன்; நன்றி செலுத்துகிறேன்.

**வல்லிக்கண்ணன்.**

# பொருளடக்கம்

# அழகி பிரான்ஸ்

நான் அவளைக் கண்டு பிடிப்பதற்கு முன்பு பாரிஸ் நகரத்தின் வீதிகளில் வெகு நேரம் அலைந்தேன். நான் விசாரித்தவர்களில் ஒருவர் கூட அவள் எங்கு வசிக்கிறாள் என்று சொல்ல முடியவில்லை.

கிழவன் ஒருவன். ஒரு வேளை அவன் வேடிக்கை பண்ணினாலும் பண்ணியிருக்கலாம். "யாருக்குத் தெரியும்? அவள் ஐரோப்பா பூராவும் வாழ்ந்த காலம் ஒன்றிருந்தது" என்று தன் தோள்களைக் குலுக்கிக் கொண்டு சொன்ன போதே அவன் என்ன காரணத்திற்காகவோ பெருமூச் செறிந்தான்.

"வட்டிக் கடைக்காரர்களின் வீதியில் வசிக்கிறாள்!" என்று, தொழிலாளி ஒருவன் கடு கடுப்பாகச் சொன்னான்.

"வலது பக்கம் திரும்பிப் போ!" என்று மற்றவர்கள் கூறினார்கள்.

சுற்றிலும் எங்கும் ஒரே கூச்சலாகத் தான் இருந்தது. அசௌகரியமாக இருந்தது என்றும் சொல்ல வேண்டும். சதுக்கங்களில் எல்லாம் துப்பாக்கி ஏந்திய படை வீரர்களும், வீதிகளில் எல்லாம் தொழிலாளிகளும் நிறைந்திருந்

தார்கள். இப்பொழுது எல்லா நாடுகளிலும் வழக்கமாகி விட்டதைப் போலவே இங்கும் போர் வீரர்கள், வீதிகளை நோக்கித் தங்கள் துப்பாக்கிகளால் சுட்டுக் கொண்டிருந் தார்கள்; குதிரைப் படையினர் உருவிய வாட்களோடு ஜனங்கள் மீது சாடிக்கொண்டிருந்தார்கள்; தொழிலாளி கள், படை விரர்கள் மீது கற்களை வீசிக்கொண்டிருந் தார்கள். மிகவும் பழமையான அந் நகரத்தின் மூச்சுத் திணற வைக்கும் காற்று கோபமான வசைச் சொற்களால் கூசி நடுங்கியது. கட்டளையிடுவோரின் அதிகார வார்த்தை களுக்கு அது எதிரொலியும் கொடுத்தது. இங்கும் அங்கும் வீதிகளில் ரத்தக் கறை படிந்திருந்தது. மண்டை உடைந் தவர்கள் ஏலாக் கோபத்தினல் கை முஷ்டிகளை இறுக மூடிக் கொண்டு, வீடு நோக்கித் தள்ளாடி நடந்தார்கள். நடக்க இயலாதவர்கள் நடுவழியிலேயே விழுந்து விட்டார் கள். அவர்கள், குதிரைகளின் கால்களிலும், போர் வீரர் களின் கால்களிலும் மிதிபடாமல் இருக்கட்டும் என்று, கருணையோடு போலீஸ் காரர்கள் அவர்களை இழுத்து அப்புறப்படுத்தினார்கள். நடை மேடைகளின் மீது வேடிக்கை பார்க்கிறவர்கள் நின்று, அந்தக் கிறிஸ்துவ நகரத்தில் சகஜமான தோற்றம் ஆகிவிட்ட ஒரு காட்சியின் விவரங்களைப் பற்றிய தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள்...

கடைசியாக, யாரோ ஒருவன் சொன்னான், "பிரான்ஸ் தானே? வட பக்கத்தில் மூன்றும் அலெக்ஸாண்டர் வாராவதிக்கு அருகே" என்று.

அவன் வசித்த போலீஸ் ஸ்டேஷன் மிகவும் பூர்வீக மான கட்டிடம் தான். ஆடம்பரமோ அழகோ அங்கு காணப்படவில்லை. நான் புகுந்து சென்ற வாசலின் அருகே சுதந்திரச் செங்கொடியைக் கிழித்துத் தயாரித்த கால் சட்டை அணிந்த போர் வீரர்கள் இரண்டு பேர் நின்றார் கள். வாசலுக்கு உயரே பொறிக்கப்பட்டிருந்த எழுத்துக்

களின் அழிந்து போன சுவடுகள் காணப்பட்டன. அவற்றைக் கவனித்துப் பார்த்தால், "சுதந்...சமத்...சகோ...வம்" என்பதை மட்டுமே யாரும் புரிந்து கொள்ள முடியும். பிரேஞ்சரும், ஜியார்ஜ் ஸேண்டும் வாழ்ந்த நாட்டை இழிவு படுத்திய வட்டிக்கடைக்காரர் கும்பலின் நினைவை இது உண்டாக்கியது. பூஞ்சக்காளம், அழுகல், ஊசல் முதலியவற்றின் நாற்றம் மண்டிக் கிடந்த சூழ்நிலை அது.

என் இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. எல்லாப் புரட்சிக் காரர்களையும் போலவே, நானும் என் வாலிபப் பருவத்தில் இந்தப் பெண்மணியைக் காதலித்தேன். உண்மையாகவும் மனதாரவும் காதல் புரிவது எப்படி என்பதையும், அழகிய முறையில் புரட்சிகளை உண்டு பண்ணுவது எப்படி என்பதையும் தானுகவே அறிந்திருந்த பெண் தான் அவள்...

கறுப்பு நிற உடை அணிந்த ஒருவன்—அதிகச் செலவுக்கு வழி வைக்கும் சுபாவமுள்ள கூட்டிக் கொடுப்பவன் ஒருவன், பிரபுவாக மாறியிருந்தால் எப்படி இருப்பானே, அப்படித் தோற்ற மளித்த ஒருவன்—மரியாதையாகச் சிரித்த வண்ணம் என்னை இருண்ட சிறு அறை ஒன்றினுள் அழைத்துச் சென்முன். அங்கே இன்றைய பிரான்சின் நவநாகரிகக் கோலத்தின் அழகைக் கண்டு வியக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

ரஷ்யாவின் பல வகை வர்ணங்களுடைய கடன் பத்திரங்களால் சுவர்கள் மூடி மறைக்கப்பட்டிருந்தன. அடிமை நாடுகளில் வசித்த மக்களின் தோல்கள் தரையில் பரப்பி வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் மீது "மனித உரிமைப் பிரகடனம்" என்ற எழுத்துக்கள் நயமான வேலைப்பாடுகளுடன் அழுத்தமாகப் பொறிக்கப்பட்டிருந்தன. பிரான்சின் விடுதலைக்காகப் போராடியபோது பாரிஸ்

நகரில் அரசுகை நின்று உயிரிழந்த மனிதர்களின் எலும்பு களால் செய்யப்பெற்ற தட்டு முட்டுச் சாமான்கள் ஏதோ ஒரு விதக் கருநிறப் பொருளினுல் மூடப்பட்டிருந்தன. அதன் மீது, ரஷ்ய ஜார் மன்னனுடன் செய்து கொண்ட கூட்டுறவு உடன்படிக்கை பூ வேலேயோடு தைக்கப்பட்டிருந்தது. ஐரோப்பிய ராஜ்யங்களின் போர்ச் சின்னங்கள் சுவர்களில் தொங்கின. உயிருள்ள மனிதர்களின் சதை பூசப்பட்ட இரும்பினுல் அமைந்திருந்தன அவை. ஜெர்மனியின் இரும்புக் கவசம் போர்த்த முஷ்டி; ரஷ்யாவின் சுருக்கு முடிச்சும், குற்றவாளிகளைத் தண்டிப்பதற்கு உரிய கசையும்; இத்தாலியின் பிச்சைக்காரப் பை; ஸ்பெயினின் போர்ச் சின்னங்களான—ஒரு ஸ்பானிஷ் காரனின் கழுத்தைப் பேராசையோடு இறுக்கிப் பிடித்துக்கொண்டிருக்கும் கத்தோலிக்கப் பாதிரி ஒருவனின் எலும்புக் கரங்கள் இரண்டும், அவனுடைய கறுப்பு அங்கியும்—காணப்பட்டன. பிரான்சின் சின்னமும் அங்கே இருந்தது — முதலாளித்துவத்தின் எடுப்பான தொந்தி வயிறு ஒன்று; பாதி மென்று விடப்பட்ட பிரீஜியா தேசத்துக் குல்லாய் ஒன்று அதனுள் கிடந்தது......

அறையின் முகட்டில் தீட்டியிருந்த ஓவியம் ஜெர்மன் கெய்சரின் பிளந்த வாயையும் அவனுடைய அறுபத்து நான்கு பற்களையும், பயங்கரமான மீசையையும் காட்டியது.... ஜன்னல்களைக் கனமான திரைகள் மூடியிருந்தன. பால்ஸாக் காலத்திய சீமாட்டிகளின் — ஆண்களை வசியம் செய்ய முடியும் என்ற நம்பிக்கையை இன்னும் விட்டு விடாது வாழ்ந்த பாட்டிமார்களின் — வரவேற்பு அறைகள் எப்பொழுதும் இருட்டாக இருந்தது போலவே, அந்த அறையும் இருள் மயமாக விளங்கியது. போலி மரியாதை, ஆத்மீக ஊழல் ஆகியவற்றின் துர் நாற்றங்கள் கலந்து குழம்பிக் கவிந்து, அங்கு வருகிறவரின் தலையைச் சுழல வைத்தது; சுவாசத்தைத் தடைப்படுத்தியது.

அவள் உள்ளே வந்தாள். தளர்ந்த கண் இமைகளின் ஊடாக, ஆண்களை அளவிடுவதில் நிபுணத்துவம் வாய்ந்த பெண்ணின் பார்வையை வீசி, அவள் வேகமாக என்னை ஆராய்ந்தாள்.

ராணி வேடம் தாங்குவதை வெகு காலமாகவே நிறுத்தி விட்ட ஒரு நடிகையின் அபிநயத்தோடு அவள் என் வணக்கத்தைத் தலை அசைத்து ஏற்றுக்கொண்டே கேட்டாள் "நீர் பிரஞ்சு பேசுவது உண்டா?" என்று.

"இல்லை, அம்மணி. நான் உண்மையை மட்டுமே பேசுவேன்" என்று நான் பதிலளித்தேன்.

"அது யாருக்கு வேண்டும்?" என்று, தோள்களைக் குலுக்கியவாறே சொன்னாள் அவள். "அதை யார் கவனித்துக் கேட்கிறார்கள்? உண்மையை யாருமே விரும்புவதில்லை -அழகான கவிதை வடிவில் இருந்தாலும் சரிதான்."

அவள் ஜன்னல் அருகே போய், திரைகளுக்கு ஊடே எட்டிப் பார்த்தாள். உடனடியாகவே விலகி வந்தாள்.

"ஆகவே, வெளியே வீதிகளில் இன்னும் அவர்கள் அதில் தான் முனைந்திருக்கிறார்களா? என்ன குழந்தைகள் அவர்கள்! அவர்களுக்கு என்னதான் வேண்டுமோ? அதை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அவர்களுக்கென்று ஒரு குடியரசு கிடைத்திருக்கிறது. நீங்கள் வேறு எங்குமே காணமுடியாத விதத்தில் மந்திரி சபை ஒன்றும் ஏற்பட்டிருக்கிறது, மந்திரிகளில் ஒருவர் சோஷலிஸ்டாகக் கூட இருந்தார்—ஒரு நாட்டின் மக்களை மகிழ்விக்க இது போதாதா என்ன?"

அவள் மனம் போன போக்கில் தலையை ஆட்டிக் கொண்டாள். "என்ன அப்படித்தானே? அது போகட்டும் நீர் என்னோடு பேச வந்திருக்கிறீர், இல்லையா?" என்றாள்.

அவள் நெருங்கி வந்து எனக்குப் பக்கத்தில் அமர்ந்தாள். தழுவல் புரியும் பாவனையில் என் கண்களையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். "நாம் எதைப் பற்றிப் பேசலாம்? காதல்? கவிதை? ஓ, என் ஆல்பிரட் தெ முஸ்ஸே! ...... என் லீகாண்ட் தெ லிஸ்லே! ...... ரோஸ்டாண்ட்!" அவள் கண்கள் புருவங்களை நோக்கி மேலேறி உருண்டன. ஆனால் அவளுடைய தலைக்கு உயரே இருந்த ஜெர்மானியனின் பற்களைப் பார்த்ததும் அவள் உடனடியாகத் தன் கண்களைத் தாழ்த்திக் கொண்டாள்.

அவள் கவிஞர்களைப் பற்றிப் பிதற்றிக் கொண்டிருந்த போது நான் அவளைத் தடுக்கவில்லை. அவள் வட்டிக் கடைக்காரர்களைப் பற்றிப் பேசத் தொடங்கும் தருணத்திற்காக நான் மௌனமாய்க் காத்திருந்தேன். ஒரு காலத்தில் உலகத்தில் இருந்த வீரர் ஒவ்வொருவரும் தமது இதயத்தில் எவளுடைய உருவத்தை வைத்துப் போற்றினார்களோ, அந்த மங்கையை நான் கவனித்தேன். அவளுடைய முகம் அளவுக்கு அதிகமாகக் காதல் புரிந்த ஒரு பெண்ணின் ஆரோக்கியமற்ற முகமாகத் தோன்றியது. அதன் பிரகாசமான நிறம் ஆயிரம் ஆயிரம் முத்தங்களினால் தேய்ந்து மங்கிப்போய் விட்டது. திறமையோடு மை தீட்டப்பெற்ற கண்கள் அமைதியற்று, பொருளுக்குப் பொருள் தாவிக்கொண்டிருந்தன. இமை ரோமங்கள் சோர்ந்து தாழ்ந்து,கனத்த கண் விளிம்புகளை மூடி மறைத்தன. அவளது கன்னப் பொறிகளிலும் கழுத்திலும் கிடந்த சுருக்கங்கள் அவளுடைய உள்ளத்தில் ஏற்பட்ட உணர்ச்சிக் கொந்தளிப்புகளின் மௌனமான சாட்சிகளாக விளங்கின. ஊதியிருந்த அவள் தொண்டையும் மோவாயும்-கொழுப்பேறிச் சீர்கெட்டுப்போன இதயத்தைப் பற்றிக் கூறின. அவள் தளர்ந்து கனத்து வளர்ந்திருந்தாள். இந்தப் பெண்ணுக்கு ஆத்மாவின் உயர்ந்த

கவிதையைப் பார்க்கிலும் வயிற்றின் கவிதைதான் மிக அருமையானது என்பது தெளிவாகத் தெரிந்தது. முன்பு ஒரு சமயம் உலகம் முழுவதும் எதிரொலிக்கும்படி அவள் உதடுகளிலிருந்து பிறந்த உண்மை, சுதந்திரம் ஆகியவற்றின் குரலைவிட, குடல்களின் ஒழுங்கற்ற கூச்சல்தான் அவளிடம் உரத்துப் பேசியது என்றும் எனக்குப் புரிந்தது. முன்னர் அவளிடமிருந்த லலிதத்துக்கும் துவட்சிக்கும் பதிலாக, சந்தைக்காரிக்குப் பழக்கமாகி விட்ட பகட்டு, உலகச் சந்தையில் சில்லறைக் கடைக்காரி ஆகிவிட்ட அவளிடமும் காணப்பட்டது. மனித குலத்தின் இன்பத்துக்காகப் போராடிய ஒரு மகா வீரநாயகிக்கு உரிய வசீகரம், எண்ணற்ற காம விளையாடல்களின் நாயகியாக மாறியுள்ள மூதாட்டியின் வெறுக்கத் தகுந்த தளுக்குக் குலுக்குக்கு இடமளித்து விட்டு மறைந்து போயிற்று.

அவள் அழுத்தமான கறுப்பு நிற மேலங்கி அணிந்திருந்தாள். அதில் ஜரிகை அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. நியூயார்க் நகரில் உள்ள சுதந்திரச் சிலை மீது படிந்திருந்த தாமிரக் களிம்பையும், உண்மையின் சக்தி செய்த வஞ்சனையின் காரணமாகத் தும்பு தும்பாகக் கிழிந்து விட்ட அனுதாபங்களையும் தான், அது எனக்கு ஞாபகப் படுத்தியது.

அவளுடைய குரல் சோர்வுற்று ஒலித்தது. தன்னலம் கருதாத உணர்வுகளுக்கு இனி இடமில்லை என்றாகி, மரத்துப் பாழடைந்து விட்ட அவளுடைய உள்ளத்திலே கூட, எப்பொழுதாவது நினைவு எனும் ஊசியால் குத்துகிற முக்கியமான எதையோ, நீதி நியாயமான எதையோ, மறப்பதற்காகத் தான் அவள் பேசிக் கொண்டிருந்தாள் என்று எனக்குத் தோன்றியது.

நான் மௌனமாக அவளைக் கவனித்தேன். அந்த ஆத்மாவின் பரிதாபகரமான மரண அவஸ்தையைக் கண்டதும், என் தொண்டையில் வெடித்து எழுந்த வேதனை ஒலியை, நான் சிரமத்தோடுதான் அடக்கிக் கொண்டிருந்தேன்.

"இது பிரான்ஸாக இருக்க முடியுமா? பளிச்சிடும் சிந்தனைகள், சமத்துவம் சகோதரத்துவம் சுதந்திரம் எனும் சுடர் விட்டு ஒளிரும் எண்ணங்களை எப்பொழுதும் என் உள்ளத்தில் சித்திரித்துக் காட்டிய உலக நாயகி இவளாக இருக்க முடியுமா?" என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

"நீர் சந்தோஷமான துணைவன் அல்ல" என்று சொல்லிவிட்டு அவள் சோர்வுப் புன்னகை புரிந்தாள்.

"அம்மணி, உண்மையான ரஷ்யன் எவனும் இன்று பிரான்ஸின் விருந்தாளியாகிற பொழுது சந்தோஷம் அடைவதில்லை" என்று நான் பதிலளித்தேன்.

"ஏன் அப்படி?" என்று அவள் மெல்லிய புன்முறுவலோடு, ஆச்சரியத்தால் இமைகளை உயர்த்திக்கொண்டே, விசாரித்தாள். "எனது பாரிஸில் ஒவ்வொருவரும் உல்லாசமாக இருக்கிறார்கள்... ஆம்; ஒவ்வொருவரும், எப்பொழுதும்!" என்றாள்.

"தெருக்களில் இப்பொழுது தான் நான் அதைப் பார்த்தேன்... எனது நாடாகிய ரஷ்யாவிலும் இதே ரகமான உல்லாசத்தை நீ பார்க்கலாம். உனது நண்பரான ரஷ்ய ஜார் அரசனுக்குப் பிடித்தமான விளையாட்டு, போர் வீரர்களுக்கும் மக்களுக்குமிடையே ஏற்படுகிற ஆட்கொல்லி விளையாட்டுத்தான்..."

"என்ன உற்சாகமற்ற ஆளாக இருக்கிறீர்!" என்று அவள் முகத்தைச் சுளித்தபடி பேசினாள். "மன்னன்

தன்னிடம் உள்ளது பூராவையும் தந்து விட வேண்டும் என்று மக்கள் அதட்டிக் கேட்கிற போது, அவன் தன்னால் கொடுக்க முடிந்ததைக் கூடக் கொடுக்கக் கூடாது...... இதைத்தான் அரசர்கள் எப்போதும் அனுஷ்டித்து வந் திருக்கிறார்கள்—இப்பொழுது மட்டும் அவர்கள் ஏன் வேறு விதமாக எண்ண வேண்டுமாம்? நீர் வாழ்க்கையைச் சாதாரண நோக்கிலே கவனிக்க வேண்டும். நீர் கிழவனா? - பின் ஏன் இந்த மனச் சோர்வு? ஒரு மனிதனுக்குக் காதல் புரியும் ஆற்றல் இருக்குமானால், வாழ்க்கையே சிறப்பான தாகி விடுகிறது. உண்மைதான்; இரண்டாவது நிக்கலஸ் –நான் அதை எப்படிச் சொல்ல?–தீயவர்களின் செல்வாக் கிற்கு மிக எளிதில் இணங்கி விடுகிறார். ஆனால் உண்மையில் அவர்– தீயவரல்ல; தெரியுமா? என்ன இருந் தாலும், அவர் உங்களுக்குச் சுதந்திரம் அளித்திருக்கிறாரே, இல்லையா? ...''

"ஆயிரக்கணக்கான உயிர்களைப் பறிகொடுத்து அவரிடமிருந்து நாங்கள் அதைப் பிடுங்கிக் கொண்டோம். இப்பொழுது, அவர் கைகளிலிருந்து அது வலுவில் பறித் துக் கொள்ளப்பட்ட பிறகும் கூட, அவர் அதற்கு விலையாக மேலும் மேலும் ரத்தம் கேட்டுக் கொண்டே இருக்கிறார். நெருக்கடியின் பேரில் அவர் தந்த சலுகையை அவரே மீண்டும் எடுத்துக் கொள்ள விரும்புகிறார்... நீ அப்படி அவர் அதை மீட்டுக் கொள்வதற்கு வசதியாக அவருக்கு இப்பொழுது பணம் கொடுத்திருக்கிறாய்...''

"இல்லை, இல்லை! அவர் அதைப் பிடுங்கிக் கொள்ள மாட்டார். நீங்கள் என்னை நம்புங்கள்!'' என்று அவள் மறுத்துரைத்தாள். "அவர், உம், அவர் கௌரவம் நிறைந் தவர். சொன்ன சொல்லைக் காப்பாற்றுகிறவர். எனக்கு அது தெரியும்...''

"படுகொலை புரிவதற்காகப் பணம் கொடுத்திருக்கிறாய் என்பதை நீ உணர்கிறாயா?" என்று நான் கேட்டேன்.

அவள் தன் முகம் பார்வையில் படாதபடி தனது தலையை இருளின் பக்கமாகச் சாய்த்துக் கொண்டாள். பிறகு அமைதியாகப் பேசினாள்:

"என்றால் அதைக் கொடாமல் இருக்க முடியாதே. அதோ அங்கே இருக்கிற அந்த வாய் என் தலையைக் கடித்து விடுவது என்று தீர்மானிக்குமானால் எனக்கு உதவி செய்யக்கூடிய ஒரே ஒருவர் அவர் தான்—நிக்கலஸ் தான்."

அவள் புன்னகை புரிந்தவாறே, ஜெர்மன் கெய்சரின் பற்கள் அலங்காரமாக மினு மினுத்த முகட்டைச் சுட்டிக் காட்டினாள்.

"உண்மையைச் சொல்வதானால், பெருந்தீனி தின்கிற அந்த வாய் என்னை தப்பு வழியில் நடக்கும்படி பண்ணுகிறது. ஆனால் என்ன செய்வது? பார்க்கப்போனால், சீர்கேடு கூட ஒரேயடியாக வெறுத்து ஒதுக்கப்பட வேண்டிய விஷயமாக இல்லை ..."

"சதா மக்களின் ரத்தத்திலேயே தோள்வரை தோய்த்தெடுக்கப்பட்டுள்ள ஒரு கரத்தின் மீது சாய்ந்து நிற்பது உனக்கு வெறுப்பாக இல்லையா?"

"ஆனால் வேறு கரம் இல்லாவிட்டால்? மக்களின் ரத்தக்கறை படாத மன்னனின் கரம் ஒன்றைக் கண்டு பிடிப்பது கஷ்டமான காரியம், தெரியுமா? இன்று அவர்கள் அப்படித்தான் இருக்கிறார்கள் — நாளை அவர்கள் எப்படி இருப்பார்களோ? நான் ஒரு பெண். எனக்கு ஒரு நண்பன் அவசியம் தேவை. ஒரு குடியரசும், ஆசியாவைச் சேர்ந்த ஒரு கொடுங்கோலனும் நட்போடு கைகோத்துக்

கொண்டு நடப்பது நிச்சயமாக அழகான காட்சியாய் இராதுதான். ஆயினும், அது ஒரு வகையில் புதுமையானது தான். நீர் அப்படி நினைக்கவில்லையா? ஆனால், நீர் அரசியலைப் புரிந்து கொள்ள வில்லை, எல்லாக் கவிகளையும் போல. ......... புரட்சிக்காரர்களையும் போல் தான் ...... அரசியலில் அழகு என்பதற்கே இடம் கிடையாது ...... வயிற்றுக்கும், வயிற்றுக்காக அடங்கி ஒடுங்கி வேலை செய்யும் மனசுக்கும் தான் இடம் உண்டு .........''

"அந்த ஜார் அரசனுக்கு நீ கொடுத்த தங்கத்தோடு பிரான்ஸின் சிறந்த புகழையும் நீ தானம் செய்து விட்டாய் என்பது உனக்குத் தோன்றவில்லையா?''

அகன்று விரிந்த கண்களால் அவள் என்னை நோக்கி லேசாகச் சிரித்தாள். தனது சாயம் பூசிய உதடுகளைத் தன்னுடைய கூரிய நாக்கின் நுனியினால் நக்கிக் கொண்டாள்.

"நீர் வெறும் கவிஞன் தான்! அது ஒரு பழம்பாட்டு, நண்பரே! நாம் கொடுமையான காலத்தில் வசிக்கிறோம். இப்பொழுது கூட ஒருவர் பாட்டுகள் எழுதலாம். ஆனால், ஒவ்வொரு விஷயத்திலும் ஒரு கவியாகவே இருக்க முயல்வது அனுபவ சாத்தியமானது அல்ல! அவ்வளவுதான்.'

அவள் அகந்தையாகப் புன்னகை புரிந்தாள்.

"என்னுடைய *ஷைலக்குகள் நல்ல வியாபாரம் செய்திருக்கிறார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. வட்டிக்காக அவர்கள் உங்கள் ஜார் அரசன் தோலில் மூன்றில் ஒரு பகுதியை உரித்து விட்டார்கள்!''

"ஆனால் அந்த வட்டியைக் கொடுப்பதற்காக ஜார் மன்னன் மக்களின் உடம்புத் தோல் பூராவையும் உரித்து விடுவார்.''

*ஷைலக்குகள் = இங்கே பிரெஞ்சுப் பணக்காரர்களையும் முதலாளிகளையும் குறிக்கும்.

"நிச்சயமாக—அதாவது, நடந்தாலும் நடக்கலாம். ஆனால் வேறு எப்படி முடியும்?" என்று அவள் தோளை ஒரு குலுக்குக் குலுக்கியபடி கேட்டாள். "அரசாங்கம் அரசியலை உண்டாக்குகிறது. அதற்காக மக்கள் தங்களுடைய உழைப்பாலும் ரத்தத்தாலும் ஈடு செலுத்துகிறார்கள்—எப்பொழுதும் இதுதான் நியதியாக இருந்து வருகிறது. மேலும், நான் ஒரு குடியரசு. எனது வட்டிக் கடை வியாபாரிகள் அவர்கள் இஷ்டம் போல் செயல் புரிவதை நான் தடுத்து விட முடியாது. இது இயல்பானது என்பதை சோஷலிஸ்டுகளால் மட்டுமே புரிந்து கொள்ள முடியவில்லை. இது மிகச் சாதாரண விஷயம். பகுத்தறிவுக்கு எதிராகப் புரட்சி செய்து உங்களை நீங்களே ஏன் அலட்டிக் கொள்ள வேண்டும்? எனது ஷைலக்குகள் பெருந்தொகை தான் கொடுத்திருக்கிறார்கள். அதில் குறைந்த அளவையாவது திரும்பப் பெற வேண்டுமானால், அவர்கள் இன்னும் அதிகம் கொடுத்தாக வேண்டும்... உண்மையில், அவர்கள் அபாயமான நிலையிலேயே இருக்கிறார்கள்... வெற்றி பெறப் போவது ஜார் இல்லை என்றாகுமானால், அவ்வளவுதான்! ஆனால்..."

அவளுடைய புகழை உருவாக்கிய அந்த வார்த்தையைக் குறிப்பிட அவள் அஞ்சினாள்...

"முடிவில் அவர்கள் பிச்சைக்காரர்களாகி விடுவார்கள். ஜார் வெற்றி பெற்றாலும் கூட அதே நிலைதான்... அவர்களுக்குரிய வட்டி சீக்கிரம் கிடைக்காது என்று நினைக்கிறேன்... அவர்கள் என் குழந்தைகள். இல்லையா? பணக்காரர்கள் தான் அரசாங்கம் என்கிற மாளிகையில் உறுதியான கற்களாக விளங்குகிறார்கள். அதன் அஸ்திவாரமே அவர்கள்தான். கவிஞர்கள் வெறும் அணிகலன்கள்தான்; கட்டிட முகப்பிலே உள்ள நகாசு வேலைப்பாடுகள்தான்... அவர்கள் இல்லாமலே யாரும் வாழ்க்கை நடத்த முடியும்.

மாளிகையின் வலிமைக்கு அதிக வலுச் சேர்க்கும் எதையும் அவர்கள் செய்வதில்லை. மக்கள், அம்மாளிகை நிற்பதற்கு உரிய இடம்தான். புரட்சிக்காரர்கள் வெறும் வெறியர் களே யாவர். இந்த உவமையைத் தொடர்ந்து கூறுவதானல், மாளிகையில் குடியிருப்பவர்களின் அமைதியையும் உடைமையையும் பாதுகாக்கும் வேட்டை நாய்களின் கூட்டம்தான் இராணுவம் என்று குறிப்பிடலாம்...''

"அதில் ஷைலக்குகள் வசிக்கிறார்களாக்கும்?''

"அவர்களும், அக் கட்டிடம் வசதி நிறைந்தது என்று கருதும் எல்லோரும்தான். ஆனல் அந்த விவகாரம் நமக்கு எதற்கு? அரசியல் லாபகரமாக இல்லாத போது அலுப்புத் தருவதாகி விடுகிறது.''

நான் எழுந்து அமைதியாகத் தலை வணங்கினேன்.

"நீர் போகப் போகிறீராக்கும்?'' என்று அலட்சியமாய்க் கேட்டாள் அவள்.

"இது எனக்கேற்ற இடமல்ல!'' என்று சொல்லி விட்டு, ஜாரையும் பாங்க் முதலாளிகளையும் கூட்டி வைப்பவளாகி விட்ட அவளைப் பிரிந்து சென்றேன்.

நான் யாரைக் காண வந்தேனே அந்த பிரான்ஸைப் பார்க்கவில்லை. அவளுக்குப் பதிலாக, கோழைத் தனமும் குற்றம் காணும் குணமும் பெற்ற ஒய்யாரக் காரியையே கண்டேன். அவளோ நாணயமற்ற முறையிலும், உணர்ச்சியற்ற தன்மையிலும், பணத்துக்காகத் திருடர்களிடமும் தூக்கிலிடுவோரிடமும் தன்னையே ஒப்படைக்கும் சுபாவம் பெற்றவளாக இருந்தாள்.

நான் பாரிஸ் நகர வீதிகளில் நடந்தேன். கூலிக்கு அமர்த்தப்பட்டிருந்த போர் வீரர்கள்—பேராசை பிடித்த

அக் கிழட்டுக் குரூபியின் வேட்டை நாய்கள்—தங்களுடைய பயனெட்டுகளாலும் துப்பாக்கிகளாலும் அந்த மாபெரும் நகரத்தை அன்று அடிமைப்படுத்தி யிருந்தார்கள். தெரு மூலைகளில் பதுங்கி நின்று எட்டிப் பார்க்கும் பிரஞ்சுக் காரர்களையும் நான் பார்த்தேன். உண்மை, சுதந்திரம் ஆகியவற்றின் நம்பகமான பாது காவலரான அவர்கள், தாங்கள் ரத்தத்தைக் கொட்டி, குடியரசின் முகத்தின் மீது படிந்துவிட்ட அவமானக் கறையைக் கழுவுவதற்குத் தயாராக நின்று, தங்களுடைய விரோதிகளின் வலிமையை மௌனமாக அளவிட்டுக் கொண்டிருந்தார்கள் ... பழைய பிரான்ஸின் ஆன்ம வேகம் — வால்டயர், ஹ்யூகோ ஆகியோரின் மாபெரும் தாயாகத் திகழ்ந்தவளின் ஆத்மத் துடிப்பு — அவளுடைய குழந்தைகளான கவிஞர்கள், வீரர்கள் முதலியவர்களின் குரல்கள் எட்டிய இடமெங்கும் சுதந்திர மலர்களைத் தூவிய பிரான்ஸின் ஆத்மசக்தி—அவர்களுடைய உள்ளங்களில் மீண்டும் பிறந்து கொண்டிருக்கிறது; வளர்ந்து வலுப் பெற்றுக் கொண்டிருக்கிறது என நான் உணர்ந்தேன்.

நான் பாரிஸ் நகர வீதிகளில் நடந்தேன். இருண்ட அறையில் அமர்ந்து என்னோடு உரையாடிய பிரான்சுக்காக என் உள்ளம் ஒரு கீதம் இசைத்தது.

தனது இளம் பிராயத்தில் தன் இதய பூர்வமாக உன்னைக் காதலியாதிருந்தவன் யார்தான்?

இளமையின் இனிய நாட்களில், அழகு, சுதந்திரம் ஆகிய தேவதைகளின் திருமுன்னர் மனிதரின் ஆத்மா முழந்தாளிட்டு வணங்கிய காலை, அவர்களுடைய உள்ளம், ஓ மாபெரும் பிரான்ஸே! நின்னிடம் தவிர வேறு எங்கும் தங்கள் ஒளிமிகு கோயிலைக் கண்டதில்லையே!

பிரான்ஸ்! உண்மையும் துணிவும் பெற்றிருந்த மனிதர் அனைவருக்கும், உணர்வு மிகுதியுடன் காதலிக்கப்

பட்ட மணப் பெண்ணின் மதிப்புற்ற நாமம் போலன்றோ தொனித்தது அருமையான அந்த வார்த்தை. உன் கடந்த காலத்தின் மகத்தான நாட்கள் தான் எத்தனை எத்தனை! மக்களுக்கு ஒளிநிறை உற்சவங்களாக அன்றோ விளங்கின உன்னுடைய போர்கள் எல்லாம்! உனது துன்பங்களி லிருந்து மிக உயர்ந்த பாடங்களைக் கற்றறிந்தார்கள் அவர்கள்.

நீதிக்காக நீ செய்த சோதனையில் மிளிர்ந்த வலிவும் வனப்பும்தான் என்னே! விடுதலையின் வெற்றிக்காக உனது நேர்மை ரத்தத்தை நீ எவ்வளவு தாராளமாகச் சிந்தினாய்! உன் ரத்தம் என்றென்றைக்கும் வற்றி உலர்ந்து விட்டது என்று கொள்ளவோ?

பிரான்ஸ்! உலகின் மணிக் கோபுரமாய் நின்றனை அன்று. அதன் உச்சியிலிருந்து பூமி முழுவதும் எதிரொலிக்கும் வகையில் மும்முறை விம்மி எழுந்தது நீதியின் நாதம். லௌகிகத் துயிலில் ஆழ்ந்து கிடந்த மக்களைத் தட்டி எழுப்பிய மூன்று ஒலிகள் அவை-சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்!

உன் மகன் வால்டயர், பேய் முகம் பெற்றிருந்த மனிதன், தன் வாழ்நாள் முழுதும் அற்பத்தனங்களை எதிர்த்து அசுரன் போல் போராடினான். அவனது விவேகமுள்ள கேலியின் விஷம், மிகுந்த வேகம் உடையதா யிருந்தது! தங்கள் வயிற்றுக்கு எவ்விதமான பாதகமும் ஏற்படாமலே ஆயிரமாயிரம் புத்தகங்களை விழுங்கிய பாதிரிகள் கூட, வால்டயர் எழுதிய ஒரே ஒரு பக்கத்தில் உள்ள நஞ்சினால் சாகடிக்கப்பட்டார்கள். பொய்களின் பாதுகாவலரான மன்னர்களைக் கூட உண்மையின் முன்பு தலைவணங்கச் செய்தான் அவன். பொய்மையின் முகத்தில் அவன் அறைந்த அறையின் துணிவும் வலிமையும் மகத்தானவை. பிரான்ஸ்! அவன்

இப்பொழுது இல்லையே என்பதற்காக நீ வருத்தப்பட வேண்டாம் — உன் மூஞ்சியில் ஓங்கி அறைந்திருப்பான் அவன். ஆத்திரப்பட வேண்டாம். அவனைப் போன்ற மகா பெரியவனுன மகன் ஒருவனின் பலத்த அறை விலைமாது ஆகிவிட்ட உன் போன்ற தாய்க்கு ஒரு கௌரவமாகவே அமையும்...

உன் மகன் ஹ்யூகோ உனது கீர்த்தி முடியில் திகழும் மிக அழகிய மணிகளில் ஒருவனுவன். சர்வஜன உரிமைகளுக்காகப் போராடியவனும் கவிஞனுமான அவன், மனித உள்ளத்தில் உறையும் சிறப்புகளை எல்லாம் உயிர் பெற்றுச் சுழல வைக்கும் சூறைக் காற்றுப் போல, உலகம் எங்கும் தன் இடியோசையை முழக்கினுன். பிரான்ஸ்! உன் கையில் சுதந்திரத்தின் கொடி ஏந்தி, உன் இன்முகத்தில் உல்லாச முறுவல் தாங்கி, உண்மையும் நற்பண்பும் நிச்சயமாக வெற்றி பெறும் என்ற நம்பிக்கையின் ஒளி உன் கண்களிலே சுடரிட, மக்களின் முன்னணியில் நீ அடி எடுத்து வைத்த காலமெல்லாம், உன் குரல் உலகெங்கும் வீரர்களைக் கவர்ந்திழுத்தது போலவே, அவனுடைய புத்தகங்கள் எங்கெங்கும் வீரர்களைச் செயலுக்கு அழைத்தன. வாழ்வை, அழகை, உண்மையை, பிரான்ஸைக் காதலிக்கும்படி அவன் மனிதர் அனைவருக்கும் போதித்தான். அவன் செத்துப் போனது உனக்கு நல்லது ஆயிற்று. அவன் உயிருடன் இருந்தால், கொடும்பாதகச் செயலை— காலத்திஞல் தலைமயிர் நரைத்து விட்ட போதிலும், ஒரு இளைஞனைப் போல், ஆர்வத்தோடு அவன் காதலித்த பிரான்ஸ்தான் செய்திருக்கிறது என்ருலும்— மன்னித்திருக்கவே மாட்டான்.

பிளாபர் — அழகின் பக்த சிரோமணி — பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஹெலீன்—பேஞவின் வலிமையைக் கௌரவிக்கவும், அதன் அழகை அறியவும் உலகின் சகல

நாடுகளிலுமுள்ள எழுத்தாளர்களுக்குக் கற்றுக் கொடுத்தவன் — சொற்களைக்கொண்டு ஜாலம் செய்யும் மந்திரவாதி—மதிப்பு மிகுந்த ஜரிகையின் சிறு துண்டு மீதும், தெருக்களில் கிடக்கும் சகதியின் மேலும் சமமாகவும் தெளிவாகவும் தன் ஒளியைப் பரப்புகிற சூரியனைப் போன்ற உண்மை நோக்கினன்-உண்மையில் அழகையும் அழகில் உண்மையையும் கண்ட அந்த பிளாபர் கூட உன்னை உனது பேராசைக்காக மன்னிக்க மாட்டான்; உன்னைக் கண்டால் வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொள்வான்!

உனது மிகச் சிறந்த மக்கள் எல்லோரும் உனக்கு எதிராகவே இருக்கிறார்கள். வட்டிக் கடைக்காரர்களின் ஆசை நாயகியே! உன்னை நினைத்து நாணுற்ற அவர்கள், சதைபடிந்த உன் முகத்தைப் பார்க்காமல் இருப்பதற்காக, தங்களுடைய நேர்மையான விழிகளைத் தாழ்த்திக் கொள்கிறார்கள். அருவருப்பான சில்லறை வியாபாரியாக மாறி விட்டாய் நீ. மானத்திற்காகவும் சுதந்திரத்திற்காகவும் உயிரைக் கொடுக்கும் பண்பை உன்னிடமிருந்து கற்றவர்கள் இனி உன்னை உணரப்போவதில்லை. அவர்கள் தங்கள் இதயங்களில் வேதனை பெருக, உன்னிடமிருந்து திரும்பியே செல்வர்.

பிரான்ஸ்! தங்கத்தின் மீது கொண்ட துராசை உன்னை இழிவு படுத்தி விட்டது. வட்டிக் கடைக்காரர்களுடன் நீ கொண்ட தொடர்பு உன் உண்மையான ஆத்மா சீர்கெட்டுப் போகும்படி செய்துள்ளது; அதன் நெருப்பை அழுக்கினாலும் அற்பத்தனத்தாலும் அவித்து விட்டது.

சுதந்திரத்தின் தாய் ஆகிய நீ, ஜோன் ஆவ் ஆர்க் ஆன நீ, இரக்கமற்ற மிருகங்களுக்கு, அவை மீண்டும் மக்களை நசுக்கும் வகை தேடட்டும் என்பதற்காக, பலம் அளித்திருக்கிறாய்.

ஒரு காலத்தில் உலகின் கலாசாரத் தலைவியாகத் திகழ்ந்த மாபெரும் பிரான்ஸே! உன் செயல்களின் கேவலமான அருவருப்பு முழுவதையும் நீ உணர்கிறாயா?

விலை போகக் கூடிய உனது கரம், சுதந்திரத்தின் கலாசாரத்தின் பாதையை ஒரு நாடு முழுமைக்கும் சிறிது காலத்திற்கு அடைத்து விட்டது. அச் சிறு காலம் ஒரே ஒரு நாள்தான் என்றாலும், உன்னுடைய குற்றம் குறைந்ததாகி விடாது. ஆனால் சுதந்திர முன்னேற்றத்தை நீ தடை செய்தது ஒரு நாள் மட்டுந்தான் என்பதல்ல. உன் பணத்தின் சக்தியால் ரஷ்ய மக்களின் ரத்தம் மறுபடியும் பெருக்கெடுத்து ஓடும்.

அந்த ரத்தம் பொய் தவழும் உன் முகத்தின் தளர்ந்த கன்னங்களில் நித்தியமான வெட்கத்தின் செந்நிறத்தைப் பூசட்டும்!

என் அன்பே!

நானும் ரத்தத்தையும் வெறுப்பையும் சேர்த்துக் காறி உமிழ்கிறேன் நின் கண்களை நோக்கி!

நியூயார்க்,
மே, 1906.

# ஒரு அமெரிக்கப் பத்திரிகையின் கேள்விகளுக்குப் பதில்

"உங்கள் நாடு அமெரிக்காவை வெறுக்கிறதா? நீங்கள் அமெரிக்க நாகரிகத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்கிறீர்கள்:

இத்தகைய கேள்விகளைக் கேட்பதும், அதுவும் இந்த விதமாகக் கேட்பதும், திரித்துக் கூறுவதிலும் உயர்வு நவிற்சியிலும், பரபரப்பிலும் அமெரிக்கருக்கு உள்ள உண்மையான ஆசையை எடுத்துக் காட்டுகிறது. சும்மா "பணம் திரட்டுவதற்கு" என்ற நோக்கோடு ஒரு ஐரோப்பியன் இத்தகைய கேள்விகளைக் கேட்பான் என்று என்னல் கற்பனை செய்யக்கூட முடியவில்லை. உங்களுடைய முதல் கேள்விக்கு – சொல்லப் போனல், மற்றுமுள்ள எல்லாக் கேள்விகளுக்குமே—எனது நாட்டின் 15 கோடி மக்களின் பெயரால் பேசுவதற்கு எனக்கு எவ்வித உரிமையும் இல்லை என்பதைக் கூற விரும்புகிறேன். ஏனெனில் உங்கள் நாட்டைப் பற்றி அவர்களுடைய மனோநிலை என்ன என்று அவர்களைக் கேட்கும் நிலையில் நான் இல்லை.

உங்கள் முதலாளிகள் எந்த நாடுகளின் ரத்தத்தை டாலர்களாக மாற்றிக் கொண்டிருக்கிறார்களோ அந்நாடு

களிலேகூட - பிலிப்பைன்ஸ், தென் அமெரிக்கக் குடியர சுகள், சீனு ஆகிய இடங்களில்கூட - அமெரிக்காவி லுள்ள ஒரு கோடி கருநிற மக்களிலும் தனது மக்களின் பெயரால் பின்கண்டவாறு பதில் அளிக்கும் துணிவுள்ள அறிவுள்ள மனிதன் எவனையும் காண மாட்டீர்கள்: "ஆமாம். எனது நாடும் என் நாட்டு மக்களும் அமெரிக்காவை வெறுக் கிறார்கள். அங்கு வசிக்கிறவர்கள் எல்லோரையும், தொழி லாளர்களையும் கோடீசுவரர்களையும், கருநிற இனத்த வரையும், வெள்ளை நிறத்தவரையும் வெறுக்கிறார்கள் உங்கள் நாட்டின் பெண்களையும் குழந்தைகளையும் அவர்கள் வெறுக்கிறார்கள். அதன் வயல்களையும் நதி களையும் காடுகளையும், அதன் மிருகங்களையும் பறவைகளை யும், அதன் கடந்த காலத்தையும் நிகழ் காலத்தையும் அதன் விஞ்ஞானத்தையும் விஞ்ஞானிகளையும், அதன் மகத்தான கலாசாஸ்திர சாதனைகளையும், 'எடிசனையும், 'லூதர் பர்பாங்கையும்,' 'எட்கார் அலன் போவையும், 'வால்ட் விட்மனையும்,' 'வாஷிங்டனையும்,' 'லிங்கனையும், 'ட்ரீசரையும்,' 'ஓ ஹென்றியையும்,' 'ஷெர்வுட் ஆண்டர்ஸனையும் மற்றுமுள்ள திறமையாளர்களான கலைஞர்கள் அனை வரையும், சிறந்த கற்பனு அலங்கார வாதியும், 'ஜாக் லண் டனின்' ஆத்மீகத் தந்தையுமான 'பிரெட் ஹார்ட்டையும் வெறுக்கிறார்கள்; 'தோரோவையும்,' 'எமர்சனையும், அமெரிக்க ஐக்கிய நாடுகளை உருவாக்கிய ஒவ்வொன்றையும் அந் நாடுகளில் வசிக்கிற எல்லோரையும் அவர்கள் வெறுக் கிறார்கள்."

உங்கள் கேள்விக்கு இவ்வாறு பைத்தியக்காரத் தனமான ஒரு பதிலை - மனிதர்கள் மீதும் கலாசாரத்தின் பேரிலும் கொண்ட வெறுப்பு நிறைந்த ஒரு பதிலை- தரக்கூடிய முட்டாள் ஒருவனை நீங்கள் எதிர் பார்க்க வில்லை என்றே நான் நம்புகிறேன்.

எனினும், அமெரிக்க நாகரிகம் என்று நீங்கள் குறிப்பிடுகிற விஷயம் பற்றி எனக்கு அனுதாபமில்லை; அது என் அனுதாபத்தைப் பெறவும் இயலாது என்பதை நான் சொல்லவேண்டும். நம் பூமியில் உள்ள நாகரிகங்களில் எல்லாம் மிகவும் அவலட்சணமான நாகரிகம் உங்கள் நாகரிகம் என்றே நான் கருதுகிறேன். ஏனெனில், ஐரோப்பிய நாகரிகத்தில் உள்ள விதம் விதமான, வெறுக்கத் தகுந்த, கோரங்களை எல்லாம் அது இயல்புக்கு விரோதமாக மிகைப் படுத்தி வைத்திருக்கிறது. வர்க்க அரசாங்கத்தின் ஜன விரோதத்தினால் ஐரோப்பா துன்பம் தரத்தக்க வகையில் சீர்கெட்டிருக்கிறது. ஆனாலும், உங்கள் லட்சாதிபதிகளையும் கோடீஸ்வரர்களையும் போன்ற பாழ்படுத்தும் போக்கும் மடத்தனமும் கொண்டவர்களை – நாட்டில் சீரழிந்தவர்களைச் சிருஷ்டிக்கும் பணப்பேய்களை—ஐரோப்பாவில் காண்பது இன்னும் சாத்தியமில்லை. வேடிக்கை ஆர்வத்தினால் ஒரு சிறுவனைக் கொன்று விட்ட பாஸ்டன் நகரத்துப் பணக்காரப் பையன்கள் இரண்டு பேரைப் பற்றி உங்களுக்கு நிச்சயமாக நினைவு இருக்கும். 'பெரிய தனத்தினாலும்' வேடிக்கை ஆர்வத்தினாலும் தூண்டப் பட்ட இத்தகைய குற்றங்கள் உங்கள் நாட்டில் எவ்வளவு நிகழ்கின்றனவோ? ஐரோப்பாவில் பிரஜைகளின் கீழ்மை நிலை பற்றியும், பாதுகாப்பற்ற தன்மை பற்றியும் எவ்வளவோ சொல்லலாம். ஆயினும் ஸாக்கோவும் வான் ஸெட்டியும் கொலை செய்யப்பட்டது போன்ற மிகுதியும் அவமானகரமான நிலைமை அங்கு இன்னும் ஏற்படவில்லை. பிரான்ஸின் 'டிரைபஸ்' வழக்கும் வெட்கப்படத் தகுந்த காரியம்தான். ஆனால், பிரான்ஸில் நிரபராதியான ஒருவனைப் பாதுகாப்பதற்கென்று 'எமிலிஸோலாவையும்' 'அனதோல் பிரான்ஸை'யும் போன்ற மனிதர்கள் முன் வந்தார்கள்; ஆயிரக்கணக்கானவர்கள் அவர்களைப் பின்

பற்றினார்கள். 'கூ-க்ளக்ஸ்-கிளானைப் † போன்ற மனித வேட்டை ஆடும் வெறியர் கூட்டம் ஒன்று ஜெர்மனியிலும் யுத்தத்திற்குப் பிறகு தலையெடுத்தது. ஆனால் அங்கே அவர்கள் பிடிக்கப்பட்டு விசாரணைக்குக் கொண்டு வரப் பட்டார்கள். உங்கள் நாட்டின் முறை இது அல்லவே. மாகாணங்களின் கவர்னர்கள், தண்டனைக்கு இடமில்லா மலே, சோஷலிஸ்டுத் தொண்டர்கள் மீது பலாத்கார மாகப் பழிதீர்த்துக் கொள்கிறார்களே, அது போல, கூ-க்ளக்ஸ்-கிளான் கொலை புரிகிறது; நீக்ரோக்களை இரக்க மற்ற முறையில் வதை செய்கிறது; தான் தண்டனை பெறாமலே, பெண்களைக் கூடக் கொடுமைப் படுத்துகிறது.

யூதவெறுப்பு என்கிற வெட்கப்படத் தகுந்த வேறொரு வியாதியினால் அது பிடிக்கப்பட்டிருந்த போதிலும், கரு நிற மனிதரைத் துன்புறுத்துவது போன்ற அருவருப்பான காரியம் எதுவும் ஐரோப்பாவில் நடைபெறவில்லை. யூத வெறுப்பு என்ற வியாதி அமெரிக்காவில் கூடப் பரவி இருக்கிறது.

ஐரோப்பாவிலும் குற்றம் படிப்படியாக அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஆயினும், உங்கள் செய்தித் தாள் களைக் கொண்டு தீர்மானித்தால்—சிகாகோ நகரில் நிகழ்ந்து கொண்டிருக்கிற அளவுக்கு அது இன்னும் வளர்ந்து விடவில்லை அங்கே. சிகாகோவில் பங்கு வியாபாரத்தையும் பாங்குகளையும் சேர்ந்த கொள்ளைக்காரர்களைத் தவிர, துப்பாக்கிகளையும் குண்டுகளையும் வைத்துக்கொண்டு கொட்ட மடிக்கும் கொள்ளைக்காரர்கள் ஊரைக் கலக்கித் திரிகிறார்கள். உங்கள் நாட்டில் மதுவிலக்கின் காரணமாக விளைகிற ரத்தம் சிந்தும் குடிவெறிக் கலகங்கள் ஐரோப் பாவில் தோன்றுவதற்கு இடமேயில்லை. சிகாகோ மேயர்

† 'கூ-க்ளக்ஸ்-கிளான்' அமெரிக்காவில் நீக்ரோக்களை வேட்டையாடி, அவர்களின் உயிருக்கும் உடைமைக்கும் தீங்கு இழைக்கும் வெள்ளை இனவெறியர் கும்பல்.

செய்தது போல், இங்கிலீஷ் இலக்கியங்களைப் பொது இடத்தில் குவித்து, தீயிட்டுக் கொளுத்தும் நகர மேயர் எவரையும் நீங்கள் அங்கு காண மாட்டீர்கள்.

அமெரிக்காவுக்கு வருமாறு 'நேஷன்' பத்திரிகாசிரியர், ஓ. ஜி. வில்லார்டு, பெர்னுட்ஷாவுக்கு அனுப்பிய அழைப்பிற்கு, அவர் கொடுத்த பதிலைப் போல் குத்தலாக, வேறு எந்த நாட்டின் அழைப்பிற்கும், அவர் பதில் அனுப்பும் உரிமை பெற்றிருப்பார் என்று நான் நினைக்கவில்லை.

எல்லா நாடுகளிலுமே முதலாளிகள் வெறுப்பான— மனிதத் தன்மை இல்லாத — இனமேயாவர். எனினும் உங்கள் நாட்டில் உள்ளவர்கள் மிகவும் நீசமானவர்கள். அவர்கள் பணத்தின் மீது மிகுந்த மூடத்தனமான பேராசை கொண்டிருக்கிறார்கள், என்பது தெளிவாகத் தெரிகிறது. 'வியாபாரி' எனும் பதத்துக்கு எனது சொந்த, அந்தரங்கமான, விளக்கம் 'புத்திசுவாதீனம் இல்லாதவன்' என்பதாகும்.

இதெல்லாம் எவ்வளவு பைத்தியக்காரத்தனமாகவும் வெட்கப்படத் தக்கதாகவும் இருக்கிறது என்பதைக் கொஞ்சம் யோசியுங்கள்: நமது சிறப்பான பூமி — மிகுந்த சிரமத்தோடு அழகுபடுத்தக் கற்றுக்கொண்டு நாம் வளம் படுத்தியுள்ள உலகம் — அநேகமாக முழு உலகமுமே, பணம் சேர்ப்பது தவிர வேறு எதுவும் செய்வதற்குத் திறமை இல்லாத, மிகவும் சிறு பான்மையான ஒரு இனத்தின் பேராசைப் பிடியிலே சிக்கியிருக்கிறது! மகத்தான ஆக்க சக்தி — "மறு இயல்பு என்று கூறத் தகும் பண்பாடுகள்" — ஆன கலாசாரத்தை அமைத்துத் தருகின்ற விஞ்ஞானிகள், இன்ஜினீயர்கள், கவிஞர்கள், தொழிலாளர்கள் ஆகியோரது ரத்தமும் மூளையும் இந்த மந்த மதியினரால் மஞ்சள் நிற உலோக வட்டங்களாகவும் (பவுன்களாக்வும் டாலர்களாகவும்) செக் புத்தகத்தின் தாள்களாகவும் மாற்றப்படுகின்றன!

*பணத்தைத் தவிர வேறு எதைத்தான் முதலாளிகள் விளைவிக்கிறார்கள்? நம்பிக்கை வறட்சியும் இருள் நோக்கும் கொண்ட மனோபாவம் (பெஸிமிஸம்), பொறாமை, பேராசை, வெறுப்பு ஆகியவற்றைத்தான். இவை முடிவில் அவர்களை நிச்சயமாக அழித்தே தீரும். ஆனால், அவை வெடிக்கும் பொழுது அவர்களோடு சேர்த்து, கலாசாரப் பொக்கிஷங்களின் பெருந் தொகுதியையும் அழித்து விடக் கூடும். நோய் முற்றி வீங்கிக் கிடக்கும் உங்கள் நாகரிகம் அளவிலாத துன்பத்தை உங்களுக்குத் தரப்போவது உறுதி.*

*அரசியல் அதிகாரம் மற்றவர்கள் உழைப்பு மீது வாழும் புல்லுருவிகளிடம் இல்லாமல்— தொழிலாளி மக்களின் முழு உரிமையாக இருக்கிற இடத்தில் தான் உண்மையான நாகரிகமும், தீவிரமான கலாசார முன்னேற்றமும் சாத்தியம் என்பது என் கருத்து. சந்தேகம் இல்லாமல், இது என் சொந்த அபிப்பிராயமே. முதலாளிகள் சமூக ரீதியில் ஆபத்தான மனிதர்களின் கும்பல் என்று பிரகடனப்படுத்த வேண்டும்; அவர்களுடைய சொத்துக்கள் அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட வேண்டும்; நடுக்கடலில் எங்காவது உள்ள தீவில் அவர்களைக் கொண்டு சேர்க்க வேண்டும்; அங்கே அவர்கள் அமைதியோடு சாவதற்கு அனுமதிக்கப்பட வேண்டும் என்று நான் சிபாரிசு செய்கிறேன். ஒரு சமூகப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு ஏற்ற இரக்கமுள்ள வழி இதுதான். 'அமெரிக்க லட்சிய வாதம்' என்கிற உணர்வுக்கு முற்றிலும் பொருத்தமானதும் கூட. நாடகங்கள், சோகக் கதைகள்—ஆகியவையே ஒரு நாட்டு மக்களின் வரலாறு என்றழைக்கப்படுகின்றன. அவற்றில் மூழ்கித் திளைக்காது, எல்லாம் நன்மைக்கே என்று கருதும் மக்களின் அப்பாவி மனப்பான்மையே 'அமெரிக்க லட்சிய வாதம்' ஆகும்.* *(1927—29)*

# மூடு பனி

மஞ்சள் கலந்த வெண் பனித் துளிகளால் போர்த்தப் பட்டிருக்கிறது நகரம். அதை ஈரப்புகைக்கு — அப்படி ஒரு பொருள் இருப்பது சாத்தியமானல் — ஒப்பிடலாம். நமக்கு முன்னே ஐந்தடி தூரத்துக்கு அப்பால் பனித் துளிகள் மிகவும் நெருக்கமாகக் காணப்படுகின்றன. அந்த இடத்தில் காற்று என்பது இருக்கவே முடியாது; அங் கிருந்த காற்றை அழுக்கு மிகுந்த இந்தப் புகை விழுங்கி இருக்க வேண்டும் என்று, நாம் எண்ணக் கூடிய அளவுக்கு அது கனமாக இருக்கிறது. ஆயினும், வேறு எந்தப் பனியினூடும் நடந்து செல்வது போலவே நாம் அதனுள்ளும் நடக்கிறோம். மூச்சு விடுவதற்குக் கஷ்டமாக இருக்கிறது; கண்கள் சக்தியற்றுப் போகின்றன என்பது தவிர வேறு வித்தியாசம் இல்லை. விஸ்தாரமான நகரத் தின் ஓசைகள் எல்லாம் மூடி முக்காடு போடப்பட்டு, வர்ண மிழந்து, மந்தமான இரைச்சலாகி விசித்திரமாய் அமுங்கி யிருக்கின்றன. மோட்டார் ஹாரன்களின் சப்தத்தை அபூர்வமாகத்தான் கேட்கிறோம். அதனினும் அபூர்வ மாகத்தான் மனிதக் குரல்களைக் கேட்க முடிகிறது. அவற் றைக் கேட்கலாம் என்று நாம் எதிர்பார்த்துக் கொண் டிருப்பதனுல்தான் அவை கூட நம் காதில் விழுகின்றன

போலும்! வெண்கல மணிகளின் நாதம் அதனுடைய ஓடிப் பெருகும் தன்மை உடைய எதிரொலியை இழந்து விடுகிறது. அவ்வொலி பையப் பைய நின்று போவதில்லை. ஒவ்வொரு தடவையும் மணி அடித்த உடனேயே மணிக் கூண்டின் மீது தொப்பியைக் கவிழ்த்து அமுக்கி விடுவது போல், அது வெடுக்கென்று நின்று போகிறது. நதியின் மீதிருந்து வருகின்ற ஊதலின் ஒலி, நீராவிக் கப்பல்கள் களைத்துப் போயிருக்கின்றன என்றோ, அல்லது மூடு பனியில் பிரயாணம் செல்ல அவை பயப்படுகின்றன என்றோ கூறுவது போல, ஒரு விதத் துயரத் தொனியைச் சுமந்து வருகிறது.

நீர் சொட்டிக் கொண்டே 'டாக்ஸி'களும், வண்டிகளும், குதிரைகளும் மூடு பனியினின்று வெளியே வருகின்றன; எண்ணெய் பூசி வழவழப்பாக்கப் பட்டவை போல மறுபடியும் அதனுள்ளேயே வழுக்கி ஓடுகின்றன. நனைந்து, அதிசயமான மௌனத்தோடு தோன்றும் மனிதர்கள் தங்கள் மேல் அங்கியின் கழுத்துப்பட்டியைத் தூக்கி விட்டுக் கொண்டு, கைகளைப் பைகளுக்குள் திணித்தபடி, கழுத்துகளை முன்னால் நீட்டியவாறே, விபத்துக்களை தவிர்க்க வேண்டும் என்ற ஆசையை எடுத்துக் காட்டும் நடையோடு ஒருவரை நோக்கி ஒருவர் நகர்ந்து செல்கிறார்கள். அரை குறையாக ஒளி ஊடுருவும் ஜவ்வினால், மூடு பனி அவர்களை மறைக்கிறது. அதனுள் மனிதன், முட்டையின் வெள்ளைப் பகுதியினுள் இருக்கும் மஞ்சள் கரு மாதிரி, காட்சி அளிக்கிறான்.

இரண்டு கிழவிகள் நனைந்த சுவர் ஒன்றின் எதிரே குனிந்து நின்று, பெரிய கறுப்புக் குடை ஒன்றோடு போராடிக் கொண்டிருக்கிறார்கள். அதைத் திறப்பதற்குச் செய்து கொண்டிருந்த முயற்சியில் அவர்கள் அதன் நுனியை, கொழுத்த சிறு மனிதன் ஒருவனின் விலாவில்

வேகமாக இடித்து விடுகிருர்கள். அவன் கூச்சல் போடு கிருன். அவ் இரண்டு கிழவிகளும், விசையினுல் இயங்கும் பொம்மைகள் மாதிரி, ஒரே சமயத்தில் தங்கள் கைகளை மேலே தூக்குகிருர்கள். அதே தன்மையில், பயந்து நடுங் கிக் கொண்டே, வியப்புச் சொற்களைத் தவிர வேறு எதுவும் இல்லாத வாக்கியங்களை உதிர்க்கிருர்கள்.

வீடுகளின் சுவர்களும் கடைகளின் ஜன்னல்களும் ஈரக் கசிவின் சிறு சிறு துளிகளால் மூடப்பட்டிருக்கின் றன. கரைந்து கொண்டிருக்கும் அழுக்கான பனிக் கட்டி யினுல் செய்யப்பட்டது போல், ஒவ்வொன்றும் இளகி யிருக்கிறது. நமது கற்பனை விபரீதமான போக்கில் திரும்பு கிறது: வான சாஸ்திரிகள் எதிர்பாராத விதத்திலே, சூரியன் திடீரென்று வெடித்து, உயிரற்ற சந்திரனை உருக்கி விட்டது. அந்த இளகி ஓடும் பொருள், புதிய பாலின் தட்ப நிலைக்குக் குளிர்ந்து, கீழே வடிந்து, அழுத் தும் புகை மயமான ஈரத்திலுல் பூமியை மூடி, திகைப் பூட்டும் ஈர அழிவு நோய் ஒன்றை அதற்கும் தொற்ற வைத்து விட்டது. கோடிக் கணக்கான மக்கள் உள்ள இந்த மாபெரும் நகரமும் உருகத் தொடங்கி விட்டது; சீக்கிரமே அதனுடைய செங்கல், கண்ணுடி, உலோகம், மரம் எல்லாம் நிசப்தமாக உருகிக் கலங்கலான நீரோடை களாகப் பெருகி ஓடும். அவை கூட ஆவியாக மாறி, நரை ஓடிய மஞ்சள் நிற மூடுபனியாகப் பரவிவிடும்......

ஆனுல், இந்த நகரத்தின் மக்கள் கிளர்ச்சியுற்ற கற்பனையின் கோரமான விளையாட்டை எளிதில் அகற்றி விடுகிருர்கள். நம்மை முதன் முதலாக நிதானப் படுத்துகிற வர்கள் போலீஸ்காரர்கள் தான். ஒரே பொருளினுல் வார்த்தெடுக்கப்பட்ட மகத்தான பிறவிகள் இவர்கள். இயந்திர ரீதியில், அமைதியோடும், நிச்சய உணர்வோடும்

இவர்கள் செயல் புரிகிறார்கள். எல்லா வீதிகளிலும் போலீஸ்காரர்கள் ஒரே மாதிரியாகத் தான் இருக்கிறார்கள். உலகத்தின் சக்தி மிக்க கொள்ளைக்காரர்களான "பணக்கார இன"த்தின் கலாசாரம் எப்படி மக்களின் மனிதப் பண்பை அகற்றி, "வேறு பட்டவர்களிடையே ஒருமைப் பாடு" ஏற்படுத்தி விடுகிறது என்பதைக் கண்டதும் அதன் ஆற்றல் மீது நமக்கு மரியாதை கலந்த வியப்பு உண்டாகிறது.

ஒழுங்கின் சக்தி மிகுந்த அந்த உந்து கோல் - போலீஸ்காரனின் கை—வண்டிகளையும், மோட்டார்களையும், சுமை நிறைந்த வண்டிகளையும் மூடுபனிக்குள்ளேயிருந்து வரவழைக்கிறது. நகரத்தின் நாசம் இன்னும் வந்து விடவில்லை என்ற நம்பிக்கையைத் தூண்டியவாறே அவற்றை மீண்டும் அனுப்பிவிடுகிறது. மோட்டார் கார்கள் மிருதுவாக வழுக்கி ஓடி, வெளிச்சமும் ஈரமற்ற கதகதப்பும் நிறைந்த வீடுகள், கடைகள் ஆகியவற்றின் வாயில்களை நெருங்குகின்றன. அவற்றிலிருந்து, நீளத் தொப்பிகளை அல்லது விதம் விதமான தலை அணிகளைத் தரித்து, மிகுந்த விறைப்போடும் மிக உருண்டையாகவும் விளங்குகிற கனவான்கள் கீழே இறங்குகிறார்கள்; அவர்கள் மரியாதையோடும் பெருமிதத்தோடும் தங்கள் கைகளை, வெகு நேர்த்தியான பெண்களின் பக்கம் நீட்டுகிறார்கள். அப் பெண்கள் சிரிப்புடனும் இசை போல் ஒலிக்கும் வியப்புச் சொற்களோடும், அவர்களுடைய பளிங்கு முகங்களில் வெறுப்பைத் தரக் கூடிய அவலட்சண இளிப்போடும், தங்கள் அழகிய பாதங்களை ஈரம் படிந்த அஸ்பால்ட் தளத்தின் மீது அல்லது கல்லால் ஆன நடைமேடை மீது எடுத்து வைக்கிறார்கள். உடனேயே, போஜனப் பிரியன் ஒருவன் சிப்பிப் புழுக்களை விழுங்குவது போல,கடைகள் அவர்களை விழுங்கி விடுகின்றன.

இந்த நகரத்தில் எவ்வளவு அதிகமான கால் அணிகள். உடுப்புகள், சணல் நூல் புடவைகள். தொப்பிகள், மெல்லிய ரோமம் படிந்த தோல்கள், தோல் சாமான்கள். பிரயாணப் பைகள், சுருட்டுகள், புகைக்கும் குழாய்கள், கைத் தடிகள், மண் பாண்டங்கள், மீன் பிடிக்கும் தளவாடங்கள், வேட்டைத் துப்பாக்கிகள், சிறுவர்களுக்கு உரிய பொம்மைகள், பெரியவர்களுக்கான விளையாட்டுச் சாமான்கள், கைக் கடியாரங்கள், தங்கச் சாமான்கள் நகைகள் இருக்கின்றன! பிரமிப்பூட்டும் பேரளவுதான். அவை எல்லாம் மிக்க சக்தியுடன் பளிச்சிடுகின்றன. அதனால், சீமான்களும் சீமாட்டிகளும் அவற்றை உபயோகிப்பதற்கு உள்ள உரிமை பற்றிய பிரச்னை, அவற்றின் வசீகரமான பளபளப்பின் முன்னே மங்கி விடுகிறது.

முக்கியமாக, தின்பதற்குரிய பொருள்கள்தான் பல வகைப்பட்டதாகவும் மிக நிறையவும் இருக்கின்றன. அவற்றின் வெவ்வேறு தினுசுகள், சாப்பாட்டு சாஸ்திரத்தின் அபிவிருத்தி பற்றியும், சமையல் கலையின் வளர்ச்சி பற்றியும், மிகுதியும் பண்பட்ட மக்களின் வயிறு சம்பந்தமான தேர்ந்த ஞானம் பற்றியும் நம்மைச் சிந்திக்கும்படி செய்கின்றன. உணவுப் பொருள்கள் விற்கும் கடைகளின் ஜன்னல்களில் உலகத்தின் நாடுகள், கடல்கள், ஏரிகள், காடுகள், நதிகள் எல்லாம் உவந்தளித்த பொருள்கள் ஆடம்பரமாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. புத்தம் புதியன, வாட்டி வதக்கப்பட்டவை, உப்புப் போட்டு உலர்த்தப்பட்டவை, டப்பாக்களில் அடைக்கப்பட்டவை இப்படி மாமிசம், மீன், நண்டு, வேட்டை மிருகங்கள், காய்கறிகள், பழங்கள், வாசனைச் சரக்குகள், வியஞ்சனங்கள், பால் கட்டிகள், மசாலையிட்ட இறைச்சிகள், அடைகள், முரப்பா தினுசுகள், பிஸ்கத்துகள், கேக்கு, சாக்கலேட், கொக்கோ – இவை எல்லாம் பல்லாயிரக்

கணக்கான டன்கள் சேகரிக்கப்பட்டிருக்கும் என்று தோன்றுகிறது. இவற்றை எல்லாம் சிமாட்டிகளும் சிமான்களும் மென்று தின்ன வேண்டும்; ஜீரணித்தும், மண்ணுக்கு உரிய உரமாக மாற்றியும் ஆக வேண்டும்...

ஒவ்வொரு வீட்டுக்கும் மூன்று மாடிகளும், ஒவ்வொரு மாடிக்கும் மூன்று அல்லது நான்கு ஜன்னல்களும் பெற்று ஒரே மாதிரியாக விளங்கிய வீடுகளை வரிசையாகக் கொண்டிருந்த, ஆள் நடமாட்டம் இல்லாத, வீதி வழியாக நெட்டைக்கால் ஆசாமி ஒருவன் மூடுபனியினூடே வேகமாக அடி எடுத்து வைத்துச் செல்கிறான். ஸ்காத்லாந்துக்காரன் மாதிரி அவன் உடை அணிந்திருக்கிறான்; ஒரு குல்லாய்; அதன் பின் புறத்தில் இரண்டு ரிப்பன்கள்; துருப் பிடித்தது போன்ற—ரொம்பவும் அடிபட்ட - சட்டை; வலது முழங்கை அருகில் காணப்பட்ட ஒட்டு, பிரிந்து அகன்று கொண்டிருக்கிறது. முழங்கால்களைத் தொட்டுக் கொண்டிருக்கிற கட்டையான உடுப்பு; முட்டிலிருந்து கணுக்கால் வரை துணி எதுவும் இல்லாத கால்கள்; குதி தேய்ந்து விட்ட பெரிய பாதரட்சைகள் அணிந்த பாதங்கள்; இவையே அவனைப் பற்றிய வர்ணனை. அவன் கைக்குள் ஒரு வகை இசைக் கருவியை இடுக்கியிருக்கிறான். அதை அவன் இடது. கையினால் விலாப்புறத்தோடு அமுக்குகிறான். அவனுடைய சிவப்புக் கைகள் ஓசைப்படாமலே அதன் விசைகளை அழுத்தும் பொழுது, அதனுடைய மூன்றுவது குழல் உல்லாசமான, கூரிய, உயர்ந்த தொனியில் இசையை வெளியிடுகிறது. அதற்கு ஏற்ப இரண்டாவது குழல் ஒரே மாதிரியான, அமுங்கிய, இழுப்பை இசைக்கிறது. அந்த வாத்தியக்காரனின் முகம் வெளிறி மெலிந்திருக்கிறது. கன்ன எலும்புகள் கூர்மையாய் துருத்திக் கொண்டிருக்கின்றன. அதனால் சருமம் சிவப்புத் திட்டுகளாகத் தெரியும்படி இறுகி

இழுபட்டிருக்கிறது. எலும்பான மூக்கு கோபமாய் சிலிர்த்து நிற்கும் சிவப்பு மீசைக்குள் வாடிக்கிடக்கிறது. மோவாயும் செப்புக் கம்பிகள் போன்ற மயிர்க் கட்டைகளினால் மூடப்பட்டுள்ளது. ஆழமாக அமையப் பெற்றுள்ள கண்கள் குழிகளுக்குள்ளிருந்து அசாதாரணமான கூரிய நோக்குடன் கவனித்துப் பார்க்கின்றன. நீலநிறக் கண்மணிகள் நெருப்பெனச் சிவந்த வெண்பரப்பின் மீது நீந்துவது போல் — நீந்திப் பளபளத்துக் கொண்டு இருப்பது போல் தோன்றுகின்றன. அக் கண்கள் சிவந்து கொதிக்கின்றன என்று சொல்லலாம் போல் தோன்றுகிறது. அவ் வாத்தியக்காரன், நான்கு வீடுகளின் ஜன்னல்களுக்குக் கீழே எண்பத்து மூன்று வேகமான எட்டுகள் எடுத்து வைக்கிறான். பிறகு, பணக்காரர் நிறைந்த தெருவின் மூலையில் திரும்புகிறான். பைத்தியக்காரனின் பிடிவாதத்தோடு அவன் தனது உலாவை மறுபடியும் தொடருகிறான். அவனது முழங்கையில் உள்ள கிழிசல் பிய்த்துக் கொண்டுபோக முயற்சிப்பது போல் படபடக்கிறது. அவன் தன் கன்னங்களை உப்பச் செய்கிறான்; மீசைகளை இழுக்கிறான்; இசைக் கருவியின் பையைக் காற்றினால் நிரப்புகிறான். பிறகு, குழலைத் தன் உதடுகளிலிருந்து நீக்கி விட்டு அவன் 'லொக்கு லொக்கென்று' இருமுகிறான். கோழையைத் துப்புகிறான். ஆயினும். அவன் நடப்பதை ஒரு கணமேனும் நிறுத்தவில்லை. அவன் நடந்து கொண்டே இருக்க வேண்டியது தான். ஏனெனில், மகிழ்ச்சி மிகுந்தவர்களின் வீட்டு ஜன்னல்களின் கீழே நின்று ஓசை எழுப்பி, அவர்கள் இளைப்பாறுவதைக் கெடுக்கக் கூடாது என்று போலீஸார் அவனைத் தடுத்திருக்கிறார்கள். ஆனால் அவன் நடந்தபடி எவ்வளவு நேரம் வேண்டுமாயினும் இசையெழுப்பலாம். ஏனெனில், இணங்கிப் போவதில் முதல் தர நாடான பிரிட்டனின் மன்னர் ஆளுகைக்கு உட்பட்ட பிரஜைகள் எல்லோரும் சுதந்திர மனிதர்கள் ஆவர். வாத்தியக்காரன்

இருமுகிருன். கரிய ரத்தக் கட்டிகளைத் துப்புகிருன். அழுக்கு முட்டிய தனது செருப்புகளால் ரத்தத்தை மிதிக்க இஷ்டம் இல்லாததனுல் தாஞே என்னவோ, அவன் நடைபாதை மேல் துப்பாமல், வீடுகளின் வழவழப்பான சுவர்கள் மீதே காறித் துப்புகிருன். யோசனை செய்து வேண்டுமென்றே அவன் இப்படிச் செய்கிருன் என்று நாம் நினைக்கவில்லை. ஆனல், இன்னும் பன்னிரண்டு அடிகள் நடந்ததும் அவன் பசியினுலும் களைப்பாலும் சோர்ந்து விழுந்து விடுவான் என்ற அனுமானம் நமக்கு ஏற்படுகிறது.

# கலாசாரப் பாதுகாப்புக் காங்கிரசுக்கு

சர்வதேச எழுத்தாளர் காங்கிரசுக்கு நானும் வந்து, பாசிஸத்தின் எழுச்சி தங்களுக்கு எத்தகைய அவமானம் என்பதைக் கூர்மையாக உணர்கிறவர்களோடு—அதன் கருத்துக்களின் நாசகரமான விஷ விளைவுகள் எப்படி எங்கும் பரவுகின்றன என்பதையும், அது தண்டனை எதுவும் பெறாமலே தனது பழி பாவங்களை எவ்வாறு நிறைவேற்றி வருகிறது என்பதையும் கண்டறிகிறவர்களோடு—கலந்துகொள்ள விடாமல், எனது உடல் நிலை என்னைத் தடுத்திருப்பதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்.

பாசிஸம் என்பது முதலாளித்துவ ஞானத்தின் புதிய குரல் அல்ல. ஆனால், அதுதான் அதனுடைய இறுதிக் குரல்—அவ நம்பிக்கையின் அவலக் குரல். 'ஐரோப்பியக் கலாசாரம்' என்ற பெயரில் வழங்கும் ஒவ்வொன்றையும் மறுப்பதுதான் அது என்பதைப் பாசிஸம் வெட்கங் கெட்ட முறையில் மேன் மேலும் அம்பலப்படுத்தி வருகிறது.

சமீப காலம் வரை முதலாளித்துவத்தின் கர்வத்திற்கும் தற்புகழ்ச்சிக்கும் காரணமாக இருந்த சாதனைகளைப் பெற்றுள்ள இந்த "மனிதாபிமான" கலாசாரத்தின் மீது ஏன் யுத்தம் தொடுக்கப்பட்டிருக்கிறது? லூதர், அவருடைய காலத்திலிருந்த வட்டி வாங்குகிறவர்களுக்கும் கடைக் காரர்களுக்கும் அவசியமானதாக அது இல்லாமல் இருந்திருக்குமானால், நிலப் பிரபுக்களின் மதமான கத்தோலிக்க மதத்தைத் துறந்திருக்க மாட்டார் என்பதை நாம் அறிவோம். நம் காலத்தில், பாங்கு முதலாளிகள், துப்பாக்கி உற்பத்தி செய்யும் முதலாளிகள், மற்றுமுள்ள புல்லுருவிகள் எல்லோரும் கூடிய தேசிய கோஷ்டிகள் ஐரோப்பாவை அடக்கி ஆளும் உரிமைக்காகவும், காலனிகளைக் கொள்ளையடிக்கும் சுதந்திரத்திற்காகவும், பொதுவாக உழைக்கும் மக்களைச் சுரண்டுவதற்காகவும் புதிய யுத்தம் ஒன்றை நடத்தத் திட்ட மிட்டுக் கொண்டிருக்கிறார்கள். குறிப்பிட்ட ஏதாவது ஒரு நாட்டை அழித்து ஒழிக்கும் யுத்தமாகத்தான் அது அமையும். "கலாசாரத்தின் அஸ்திவாரம்" ஆன முதலாளித்துவ மனிதத்துவத்தை முற்றிலும் துறந்து விடும்படி அது கட்டளை பிறப்பிக்கும். இந்த மனிதத்துவமானது — முதலாளித்துவ செயல் முறையான "உள்ளதை மறைத்து உருமாற்றிக் காட்டும்" திருப்பணியைத்தான் எப்பொழுதும் செய்து வந்திருக்கிறது; "குட்டி முதலாளிகளில் சிறந்து விளங்குகிறவர்களை எல்லாம் தங்களுடைய முன்னணிப் படைக்காகப் பெரிய முதலாளிகள் தேர்ந்தெடுப்பதற்கு வாய்த்த ஒரு வழி" யாகவும் அமைந்துள்ளது அது. பல நாட்டு மக்களையும் கொன்று குவிக்கத் திட்டமிடும் பொழுது, பாசிஸம் தனது ஆதார நோக்கங்களுக்கு மனிதத்துவம் என்பது விரோதமான கருத்து என்றே மதிப்பிடுகிறது.

பிரெஞ்சு எழுத்தாளர்களது தூண்டுதலின் பேரில், உலகத்தில் உள்ள நாணயமான எழுத்தாளர்கள் பாசிஸத்தையும் அதன் கொடுமைகளையும் எதிர்க்கக் கிளம்பி இருக்கிறார்கள்.

இச் சிறந்த நோக்கம் "கலாசாரத்தின் தலைவர்" களுக்கு முற்றிலும் இயல்பானதே யாகும். கலைஞர்கள் காட்டியுள்ள வழியை விஞ்ஞானிகளும் பின்பற்றுவார்கள் என்று நிச்சயமாக எதிர் பார்க்கலாம்.

மனிதத்துவத்தின் மாண்பு இரண்டு கால் ஓநாய்கள், பன்றிகள் ஆகியவற்றின் அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயமாகும்; மனிதத்துவத்தின் உலக முக்கியத்துவத்தைப் புரிந்து கொண்டு அனுதாபம் காட்டும் திறமை பெற்ற வர்க்கம் உலகத்தில் ஒன்றே ஒன்றுதான் உண்டு என்பதைச் சரித்திரம் மிகவும் தெளிவாக எடுத்துக்காட்டி விட்டது என்பது நினைவில் நிறுத்த வேண்டியதாகும். அந்த வர்க்கம் தான் பாட்டாளி வர்க்கம்.

ஆகவே, ஒத்துப்போக முடியாதவற்றை இணங்க வைக்கப் பாடுபடுவதற்கான வழியில் நம் முயற்சிகள் இருக்க வேண்டியதில்லை. முதலாளித்துவ சமுதாயத்தைச் சீர்திருத்த நாம் முயல வேண்டாம். விரோதம் இல்லாமலும், மனிதவர்க்கத்தின் பெரும் பகுதியை அடக்கி ஒடுக்காமலும் முதலாளித்துவ சமூகம் வாழ முடியாது; வாழும் ஆற்றலும் அதற்குக் கிடையாது; அதன் அமைப்பே அத்தகையதுதான். கோடானு கோடி உழைப்பாளி மக்களிடையே மறைந்து கிடக்கின்றவற்றாத வளம் கொழிக்கும் அறிவுச் சக்தியைப் பயன்படுத்தும் வேலையில் தான் நமது முயற்சிகள் ஈடுபடுத்தப்பட வேண்டும்.

ஒரே ஒரு உண்மையான மனிதத்துவம் பாட்டாளி வர்க்க மனிதத்துவம் தான். நமது உலகத்தின் சமுதாய

வாழ்வு, பொருளாதார வாழ்வு ஆகியவற்றின் அஸ்தி வாரங்களையே மாற்றி அமைக்கும் உன்னதமான லட்சியத் தை அது தனக்கெனத் தானே வகுத்துக் கொண்டுள்ளது. அதிகாரத்தை பாட்டாளி வர்க்கம் கைப்பற்றியுள்ள நாட்டிலே, அதன் மக்கள் தொகுதியில் மறைந்துள்ள ஆற்றல் எவ்வளவு அபரிமிதமானது; எத்தகைய பெரும் திறமைகள் அதனிடம் பிறக்கின்றன; புதிய உள்ளடக் கத்தை அளிப்பதன் மூலம் வாழ்வின் அமைப்புகளையே அது எவ்வளவு வேகமாக மாற்றிக் கொண்டிருக்கிறது என்பதை எல்லாம் நாம் காண முடிகிறது.

அருமைத் தோழர்களே, நேர்மையான மக்களின் உண்மை பொதிந்த சொற்களைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் உடையோர், பாட்டாளிகள்,கலைத்தொண்டர்கள் பணி புரியும் அறிவாளிகள், உழைக்கும் விவசாயிகள் ஆகியோரே. அவர்கள் கலாசாரத் தலைவர்களாக விரும்பு கிறார்கள். அத்தகைய தகுதி அவர்களுக்கே உண்டு.

மாக்ஸிம் கார்க்கி

# கொழுத்தவர் சங்கீதம்

இரவு. எனினும், தென் இத்தாலியின் அந்நேரத்திய அற்புதமான வானத்திற்கு - நீல நிறமான ஒளியும் அன்பு தவழும் மண்ணின் மணம் கலந்த கதகதப்பும் இணைந்து விளங்குகிற இந்த ஆகாயத்திற்கு — இரவு என்கிற வார்த்தை அவ்வளவு பொருத்தமல்ல. இந்த ஒளி சூரியனிடமிருந்து பிறந்து பொன்மயச் சந்திரனால் பிரதிபலிக்கப் பெற்று எங்கும் பாய்வதாகத் தோன்றவில்லை. ஆனால், சுறு சுறுப்போடும் திறமையோடும் மனிதனால் பயிராக்கப்படுகிற சோர்வில்லாத,வளம் மிகுந்த, மண்ணிலிருந்து பரவுவதாகத் தான் தோன்றியது. வெள்ளியில் பொதிந்தவை போல் திகழும் ஆலிவ் மர இலைகளிலிருந்தும் மலைச்சரிவுகளில் உள்ள கல் சுவர்களி லிருந்தும், ஒளி மௌனமாகப் பெருகி ஓடுகிறது. மண் சரிந்து விழுவதைத் தடுப்பதற்காகத் தான் அச் சுவர்கள் அங்கு உள்ளன. அவை மலைச் சரிவுகளைத் தட்டையான மேல் தளங்களாக ஒழுங்கு படுத்துகின்றன. அவற்றில் தானியம், மொச்சை, உருளைக்கிழங்கு, முட்டைக் கோஸ் ஆகியவை பயிர் செய்யப்படுகின்றன. கொடி முந்திரித் தோட்டமும், ஆரஞ்சு, எலுமிச்சை ஆகியவற்றின் தோப்புகளும் அமைக்கப்பட்டுள்ளன. முயற்சியும்

தேர்ச்சியும் நிறைந்த உழைப்பு எவ்வளவு இங்கே செல விடப் பட்டிருக்கிறது! ஒளி ஊடுருவிச் செல்லக் கூடிய வெள்ளி மயமான மூடுபனியின் ஊடாக ஆரஞ்சு, மஞ்சள் நிறப் பழங்கள், நட்சத்திரங்கள் மலர்ந்த வானம் போன்ற தோற்றத்தை பூமிக்கு அளித்தபடி பளபளக்கின்றன. பூமி, அதில் உழுது பயிரிடுகிறவர்களால் ஏதோ ஒரு விழா விற்காக இனிமையாக அலங்காரம் செய்யப்பட்டுள்ளது; அவர்கள் ஓய்வு பெறுவதில் இரவு நேரத்தைக் கழித்து விட்டு, "மகிழ்ச்சி கொண்டாடவும் ஆனந்தமாக இருக்கவும்" காலையில் கதிரவனுடன் விழித்தெழுவார்கள் என்று யாரும் எண்ணக்கூடும்.

பரி பூரண அமைதி நிலவுகிறது. பூமியில் உள்ள ஒவ் வொன்றும் அசைவற்று இருக்கிறது. ஆகவே, அவை எல்லாம் மிக உயர்ந்த கலைஞன் ஒருவனால் செதுக்கப்பட்டி ருக்குமோ; அல்லது, வெண்கலத்தையும் நீல மய வெள்ளி யையும் சேர்த்து வார்க்கப் பட்டிருக்கலாமோ என்று தோன்றுகிறது. இங்கு நிலவும் பூரணமான அமைதியும் அழகும், உலகத்தின் அற்புதங்களை எல்லாம் ஆக்குகின்ற வற்றாத உழைப்புச் சக்தியைப் பற்றி வெற்றிக்களிப்புடன் எண்ணும்படி தூண்டுகின்றன. வலிமை மிக்க உழைப்புச் சக்தி இன்னும் கொஞ்ச காலத்தில், தூர வடக்கில் உள்ள நிலத்தைக் கூட வருஷம் முழுவதும் மனிதனுக்குப் பயன் படும்படி செய்து விடும்; மிருகங்களை அடக்கி ஒடுக்குவது போல் அதையும் மனிதசக்தி அடக்கி விடும் என்ற நம்பிக்கை உண்டாகிறது. மகா அற்புதங்களைச் செய்கிறவனை மனிதனைப் பற்றியும், அவன் தனது குழந்தைகளுக்காக நிர்மாணிக்கிற சிறந்த எதிர்காலம் பற்றியும், மகிழ்வோடும் தியான உணர்வோடும், (பிரஞ்சுக் காரர்கள் கூறுவது போல் "இவ்வார்த்தையைக்கூற என்னை அநுமதியுங்கள்"!) நாம் எண்ண நேரிடுகிறது.

விஞ்ஞானிகளின் உருவங்களும் முகங்களும் நினைவில் எழுகின்றன ...... காமா நதியின் மேல் தீரத்தில் உள்ள பொட்டாஷியம் சுரங்கங்கள் பற்றி 'டி. என். பிர்யானிஷ்னி கோவ்' சொன்னது மீண்டும் நினைவுக்கு வருகிறது. முன்பு கண்ட பெரியார்கள் இப்போது கண்முன் தோன்றுகிருர்கள்: சிறந்த மனிதரான ஐ. பி. பாவ்லோவ்; 1906 – ல் மான்ட்ரீல் நகரில் தம்முடைய ஆராய்ச்சிக் கூடத்தில் இருந்த ருதர்போர்டு; ரஷ்யாவின் விஞ்ஞானத்தை உருவாக்கியவர்கள் ஆகிய பலர், ஒருவர் பின் ஒருவராக மனக் கண்ணில் தோன்றுகிருர்கள்; அவர்களுடைய புத்தகங்களின் நினைவும் வருகிறது. நமது நினைவுத் திரையில் அதிசயிக்கத் தக்க விஞ்ஞான விளைவுகளும், உலக விஞ்ஞானிகளின் முன்னேறிச் செல்லும் உழைப்பும் சித்திரம் போல நிழலிடுகின்றன. அதீத பயங்கரக் காட்சிகளுக்கும் நடைமுறை உண்மைகளுக்கும் நடுவில் உள்ள இடைவெளி நம்ப முடியாத வேகத்தில் குறைந்து வருகிற யுகத்திலே நாம் வாழ்ந்து கொண்டிருக்கிருேம்.

* * *

சிறிது காலத்துக்கு முன்பு, நமது பிராந்திய இயற்கை வரலாற்று அறிஞர்களில் ஒருவரான, கோஸ்லோவைச் சேர்ந்த தோழர் ஆண்ட்ரீ பாக்ரேவ், அற்புதம் சிருஷ்டிக்கும் ஆற்றல் பெற்ற இருவர் பற்றி தமது கடிதம் ஒன்றில் எனக்கு ஞாபகப் படுத்தியிருந்தார். தாமாகவே பயின்று தாவர நிபுணராகி விட்ட லூதர் பர்பாங்க் என்னும் அமெரிக்கரும், நம் நாட்டு மேதை ஐவான் விளாடிமிரோவிச் மிச்சுரினும் தான் அவர்கள். தோழர் பாக்ரேவின் கடிதத்தின் ஒரு பகுதியை நான் உரிமையோடு பிரசுரிக்கிறேன். நான் இப்படிச் செய்வதனுல் அவர் என் மீது மனவருத்தம் கொள்ளமாட்டார் என்று நம்புகிறேன்.

"பழச் செடிகளின் கலப்பு ஒட்டு முறைகளைப் பற்றிய ரகசியங்கள் பலவற்றை லூதர் பர்பாங்க் கண்டுபிடித்தார் என்பதை நாம் அறிவோம். அவற்றின் பயனாக அவர் தயாரித்த பல ரகச் செடிகள் — பலன்தரும் சக்தி, இடத்துக்கு ஏற்றபடி ஒத்துப் போகும் பண்பு, மணம், பூச்சிகள், நோய்கள் முதலியவற்றிலிருந்து தற்காத்துக் கொள்ளும் தன்மை ஆகிய விஷயங்களில்–பிரமிக்கத் தக்கவையாக இருக்கின்றன. அது மட்டுமல்ல; அவை எல்லாம் அளவிலும் தன்மையிலும் இயற்கைக்கு மாறுபட்ட அதிசயங்களாகவே விளங்குகின்றன. அவை வட அமெரிக்கா பூராவையும் அதிக வளமானதாக ஆக்கியுள்ளன. அவர் சிருஷ்டித்துள்ள தின்னக் கூடிய 'சப்பாத்துக் கள்ளி'கள் தங்கள் முட்களை இழந்து விட்டன. கல் மாதிரி கடினமான கொட்டைகளை, இலை போல் லேசானதாக மாறும்படி செய்து விட்டார் பர்பாங்க். தோட்டக்கலை மேதையான பர்பாங்கின் திறமையை மதிப்பிட மேற்கூறிய உதாரணங்களே போதும்.

"சோவியத் யூனியனில், டாம்பாவ் மாகாணத்தைச் சேர்ந்த 'கோஸ்லோவ்' நகருக்கு அருகே, நிலம் நெடுங்காலமாகவே வண்டல் படிந்து அடை மண்ணாகி, வில்லோ, பாப்லார், மேப்பிள் முதலிய மரங்கள் தன்னிச்சையாக வளர்ந்து கிடக்கிற இடத்தில் ஒட்டுச் செடிகள் உற்பத்தி செய்பவரும் தாவரங்களில் புது இனங்களை உண்டு பண்ணுகிறவருமான ஐவான் விளாடிமிரோவிச் மிச்சுரினின் நாற்றுப் பண்ணை இருக்கிறது. அது சிறியது, எனினும் மிக விநோதமானது.

"அதிக உஷ்ணமோ அதிகக் குளிரோ இல்லாத கலிபோர்னியாவின் சாதகமான சீதோஷ்ண நிலையில் லூதர் பர்பாங்க் நாற்று வளர்த்தார். ரஷ்யாவின் மத்திய

பாகத்தின் கடுமையான சீதோஷ்ண நிலையில் மிச்சுரின் நாற்றுக்களை வளர்த்தார்.

"பணக்காரர்களின் தேவையைத் திருப்தி செய்வதற்காக, பழ மரங்களில் அநேக வகைகளைச் சிருஷ்டித்தார் லூதர் பர்பாங்க். மிச்சுரின் நூற்றுக்கு மேற்பட்ட பழ வகைகளை உண்டு பண்ணினார். அவைகளில், கிறிஸ்துமஸ் வருகிற வரையில் பழுக்காமலே (பெட்டிகளிலும் நிலவறைகளிலும்) இருக்கக் கூடிய பேரிக்காய்களும் உண்டு. அவை ஏப்ரல் மாதம் வரை எவ்வித பாதுகாப்பற்ற நிலைமையிலும் கெட்டு விடாமல் இருக்கக் கூடியவை.

"கடுமையான சீதோஷ்ணம் உள்ள டாம்பாவ் மாகாணத்தில் இருக்கும் மிச்சுரினின் பழத் தோட்டத்தில் ஏப்ரிகாட், நான்கு வகையான கொடி முந்திரிப் பழம், வாதாங் கொட்டை, வால்நட், முசுக்கொட்டைச் செடி, டாமஸ்க் ரோஜா, க்வின்ஸ், நெல், சணல் முதலியன வளர்ந்து செழுமையாகப் பலன் தருகின்றன. இவை முதிர்ச்சி அடையாத அறிவும் அனுபவமும் படைத்த உழைப்பாளிகளுக்கும், கிராமவாசிகளுக்கும், தோட்ட விவசாயிகளுக்கும், பண்ணை விவசாயிகளுக்கும் பயன் படுகின்றன.

"லூதர் பர்பாங்க்-தமது வளர்ப்புப் பயிர்களைச் செல்லமாக வளர்த்து வந்தார். எந்தக் கடுமையான சீதோஷ்ண நிலைமையிலும் அவை வளர்ந்து பலன் தரக் கூடிய வகையில் மிச்சுரின் அவற்றைப் பயிற்றுவித்தார்.

"லூதர் பர்பாங்க் தமது தொழிலை ஆரம்பித்த காலத்தில் ஏழையாக இருந்தார். ஆனால், புதுமைகளைச் சிருஷ்டிப்பவராக அவர் மாறியது முதல், அமெரிக்கக் கலாசாரத்தின் எல்லா வெகுமதிகளையும் பெற்று மகிழ்ந்தார். மிச்சுரின் – (பழைய ரஷ்யாவின் பாழடைந்த நிலைமைகளை

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்) — கொடுமையான வறுமை நிலையில் வாழ்ந்து வந்தார். இருந்த போதிலும், போராட்டமும் குழப்பமும், ஏமாற்றங்களும், தோல்விகளும் வெற்றிகளும் நிறைந்த தமது நீண்ட ஆயுளில், ரஷ்யாவின் மத்திய பாகத்தை மட்டுமல்லாமல், உலகத்தின் குளிர் பிரதேசம் அனைத்தையும் வளம் படுத்தக் கூடியவற்றைச் சிருஷ்டித்திருக்கிறார். அதாவது மிச்சுரின் தெற்கை எடுத்து வடக்கில் நடுகிறார்!

"லூதர் பர்பாங்கும், மிச்சுரினும் தோட்டக்கலையின் நேர்மாறான இரு துருவங்கள் ஆவர். எனினும் இருவருக்கும் பொதுவான அம்சங்கள் நிறையவே இருக்கின்றன.

"இருவரும் இளம் பருவத்திலிருந்தே தங்களுடைய வேலையைத் தொடங்கினர்கள். இருவரும் ஏழைகள். இருவரும் சிறந்த சிந்தனையாளர், கலைஞர், புதியன கண்டு பிடிப்பவர் தாம். செடி வளர்ப்புத் துறையில் இருவரும் மகத்தான புதிய நுட்பங்களைக் கண்டு பிடித்துள்ளார்கள்.

"தோட்டக் கலைக்கு உரிய வழி வகைகளில் மிகப் பிரதானமான விஷயத்தைக் கண்டு பிடித்த பெருமை முக்கியமாக மிச்சுரினுக்கே உரியது. அவ் வழிகளைக் கையாண்டு வருங் காலத்தில் மிக விரைவிலேயே மனிதன் புதிய புதிய தாவர வகைகளை சிருஷ்டிப்பது சாத்தியம் ஆகலாம். மேலும் அவனது வாழ்க்கையின் தேவைகளை முற்றிலும் திருப்தி செய்யக்கூடிய — சீதோஷ்ணத்தின் தடுக்க முடியாத மாறுபாடுகளுக்குத் தகுந்தாற் போல் இணங்கிப் போகும் தன்மையை அதிகம் பெற்ற - பழச் செடிகளின் புதிய இனங்களை உற்பத்தி செய்யும் ஆற்றலையும் மனிதன் அடைந்து விடுவான்.

"மிச்சுரின் கல்வி இலாகாவின் விஞ்ஞானப் பகுதியின் கீழுள்ள இயற்கை விஞ்ஞானக் கழகம் முதலியவற்றின் கௌரவ அங்கத்தினர்.

"மிச்சுரின் இப்பொழுது கிழவர் ஆகிவிட்டார். அவருக்கு வயது 72. ஆயினும் இன்னும் அவர் உழைத்துக் கொண்டு தான் இருக்கிறார். தாவர உலகத்தின் மர்மங்களை மூடியிருக்கும் திரைகளை இப்பொழுதும் அவர் ஒன்றின் பின் ஒன்றாகக் கிழித்தெறிந்து கொண்டிருக்கிறார்."

★ ★ ★

பலவகைப்பட்ட அற்பமான, அன்றாடத் தொல்லைகளிலிருந்து உள்ளம் விடுதலை பெற்று ஓய்வு பெறுவதற்குத் துணைபுரியும் இந்த இரவின் நிசப்தம், அகில உலக மனிதர்களின் உழைப்பில் எழும் கம்பீரமான இசையை சரித்திரத்தில் புது யுகமாக விளங்கும் காலத்தின் சிறப்பான கீதத்தை, எனது நாட்டின் தொழிலாளி மக்கள் துணிவுடன் ஆரம்பித்து வைத்துள்ள பாடலை, உள்ளத்தில் முணு முணுப்பது போல் தோன்றியது.

ஆனால், திடீரென்று, இரவின் ஆழ்ந்த அமைதியின் ஊடே, அறிவில்லாத சுத்தியல் எதுவோ பலமாக அடிக்கத் தொடங்குகிறது. ஒன்று, இரண்டு, மூன்று, பத்து, இருபது அடிகள் — தெளிந்த தூய தண்ணீரில் திரளான சேறு வந்து விழுவது போல், காட்டுத்தனமான ஊளையும் கிரீச்சிடும் ஒலியும், கதறலும், கடகடப்பும், வீரிடுதலும், அரைத்தல் ஒலியும் பாய்கின்றன. மனிதத்தன்மை இல்லாத குரல்கள், குதிரையின் கனைப்பைப் போன்று, காற்றைப் பிளக்கின்றன. பன்றி உறுமினால் போன்ற ஓசையும் கனைப் பொலியும், ராட்சசத் தவளைகளின் காமக் கூச்சலும் நம் காதைத் தாக்குகின்றன. அவமானப் படுத்துகின்ற வெறித்தனமான இந்தக் கூச்சல்கள் எல்லாம் லேசாகப் புலனாகின்ற ஏதோ ஒரு தாளத்துக்குக் கட்டுப்பட்டுள்ளன; இந்தப் பேய்க் கூத்தை ஒன்று அல்லது இரண்டு நிமிஷ

நேரம் கவனித்துக் கொண்டிருந்ததும்,இதெல்லாம் காமத்தினால் வெறியராகி விட்ட பைத்தியக்கார வாத்தியக்குழுவினரின் கச்சேரி என்றும், மனிதப் பொலி குதிரை ஒன்று மிகப்பெரிய ஆண்குறி தாங்கி, முன்னின்று அதை நடத்தி வைக்கிறது போலவும் தோன்றுகிறது.

இது தான் ரேடியோ; விஞ்ஞானத்தின் மிக முக்கியமான கண்டுபிடிப்புகளில் ஒன்று. தோற்றத்தில் ஊமையான இயற்கையிடமிருந்து விஞ்ஞானம் வலிதில் பிடுங்கிக் கொண்ட ரகசியங்களில் இதுவும் ஒன்று. பக்கத்து ஹோட்டலில் உள்ள ரேடியோ கொழுத்த மனிதர்களின் உலகத்திற்காக, கொள்ளைக்காரர்களின் உலகத்திற்காக சங்கீத விருந்து அளித்துக் கொண்டிருக்கிறது; நீக்ரோ இசைக்குழு ஒன்று நிகழ்த்தும் புதிய காம நாட்டிய சங்கீதத்தை அது ஒலி பரப்புகிறது. கொழுத்த மனிதர்களுக்கான சங்கீதம் இது தான். 'கலாசார' நாடுகளின் டாம்பீகமான நடன அரங்கங்களில் எல்லாம், கொழுத்த ஆண்களும் பெண்களும் கூடி புணர்ச்சித் தொழில் புரிவது போல் பாவனை பண்ணி, வெட்கங்கெட்ட செயலில் ஆழ்ந்து, தங்கள் தொடைகளைத் தாளத்திற்கு இணங்க ஆட்டி நெளித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நினைவுக்கு எட்டாத காலத்திலிருந்து, எல்லா யுகங்களிலும் சகல நாடுகளிலும் உள்ள மகா கவிகள் பலரும் புணர்ச்சியை மேன்மைப் படுத்தும் பணியில் தங்கள் சிருஷ்டித் திறனை ஈடுபடுத்தினார்கள்; மனிதன் தன்னைத் தானே ஆடு, மாடு, பன்றி ஆகியவற்றின் தரத்துக்குத் தாழ்த்திக் கொள்ளாமல் இருக்க வேண்டும் என்பதற்காக, அவன் மேன்மையை நிலைநிறுத்தும் நோக்கத்தோடு அதை அழகு படுத்த அரும்பாடு பட்டார்கள். காதலைப் புகழ்ந்து பாடும் மகத்தான கவிதைகள் நூற்றுக் கணக்கிலும் ஆயிரக்

கணக்கிலும் எழுதப்பட்டிருக்கின்றன. ஆண் பெண்களின் சிருஷ்டித் திறமைக்குக் காதல் ஒரு தூண்டுதலாக இருந்திருக்கிறது. மிகவும் மதிநுட்பம் பெற்ற மிருகங்களை விட அதிகமான சமுதாய உறவு உடையவனாக மனிதனை ஆக்கியுள்ளது காதல். ஆண் பெண் இன உறவில் உள்ள செயல் திறமான, ஆரோக்கியமுடைய, லௌகிக கற்பனாலங்காரத்தில் காணப்படும் கவித்துவ சக்தியானது, சமூகக் கல்வி அபிவிருத்தியில் மாபெரும் மதிப்புள்ள அம்சமாக இருந்திருக்கிறது.

"பசியும் காமமும் உலகத்தை இயக்குகின்றன" என்று ஷில்லர் சொன்னார். காதல் கலாசாரத்திற்கு அஸ்திவாரம்; பசி நாகரிகத்திற்கு ஆதாரம்.

ஆனால், இங்கே வந்து சேருகிறான், பிறர் உழைப்பின் மீது உயிர் வாழ்கின்ற புல்லுருவியான, சதை மிகுந்த கொள்ளைக்காரன்! "நான் இல்லாவிட்டால், பிரளயம் தான்!" என்பதுவே மனிதத் தன்மையற்றவனான அவனது கொள்கையாகும். ஞான தீபங்களான மகாகவிகளின் மிக மென்மையான உணர்ச்சிகளால் பின்னப் பட்டுள்ள அனைத்தையும் அவன் தனது கொழுப்பேறிய காலினால் மிதித்துத் துவைக்கிறான்.

கொழுத்த மனிதனாகிய அவன் தோழியாகவும் துணைவியாகவும் இருப்பதற்குப் பெண்ணை நாடுவதில்லை. அவள், அவனைப் போலவே ஒரு கொள்ளைக்காரியாக இல்லாத பட்சத்தில், அவனுக்கு வெறும் பொழுது போக்குக் கருவியாகத் தான் இருக்கிறாள். தாய் என்ற தன்மையிலும் பெண் அவனுக்குத் தேவையில்லை. ஏனென்றால், அவன் சக்தியை விரும்பிய போதிலும், குழந்தைகளை ஒரு தொல்லையாகவே மதிக்கிறான். ஆமாம். சக்தி கூட, காம நாட்டியம் ஆடுவதற்காகத் தான் அவனுக்குத் தேவைப்படும் என்று தோன்றுகிறது. காம நாட்டியங்கள் அவனுக்கு இன்றியமையாதன ஆகிவிட்டன. ஏனெனில், நமது கொழுத்த

மனிதன் பலவீனமான ஆணே யாவன். அவனுக்குக் காதல் என்பது சக்தியை வீணுகச் சிதறுவது தான்; 'கட்டுப் பாடற்ற சதையின் கொதிப்புற்ற உணர்ச்சித் துடிப்பு' என்ற பழைய நிலை போய், காதல் என்பது கற்பனையின் வக்கிரப்போக்காக மாறிக்கொண்டே வருகிறது. கொழுத்த மனிதர்களின் உலகத்திலே ஒரு பால் காமம் தொத்து வியாதி மாதிரிப் பரவிக் கொண்டிருக்கிறது. கொழுத்த மனிதரின் "பரிணமமே" சீர்கேடு தான்!

'மின்யூயெட்' நடனத்தின் அழகு, 'வால்ட்ஸ்' நடனத் தின் உற்சாகம் நிறைந்த உணர்ச்சி ஆகியவை, 'பாக்ஸ்டி ராட்'நாட்டியத்தின் காமத்தன்மையாகவும் 'சார்லஸ்டன்' நாட்டியத்தின் வலிப்பாகவும், மோஸார்ட், பீத்தோவன் ஆகியோரின் இன்னிசை, நீக்ரோக்களின் ஜாஸ் சங்கீத மாகவும் மாறியிருப்பது தான், கொழுத்த மனிதரின் பரிணமம் ஆகும். அமெரிக்க நீக்ரோக்கள் தாங்கள் கடந்து விட்ட நிலைமையை - அவர்கள் மேலும் மேலும் கடந்து சென்று கொண்டிருக்கிற காட்டுமிராண்டித் தனத்தை - தங்களின் எஜமானர்களான வெள்ளையர்கள் பரிணம ரீதியாக எட்டிப் பிடிப்பதைக் கண்டு முகத்தை மறைத்துக் கொண்டு சிரிக்கிறார்கள்!

'கலாசாரம் அழிந்து கொண்டிருக்கிறது!'—பாட்டாளி இனத்தின் மீது கொழுத்தவர் செலுத்தும் ஆதிக்கத்துக்குப் பரிந்து பேசுகிறவர்கள் 'கலாசாரத்தை பாட்டாளி வர்க்கம் அழித்துவிடப் போகிறது!' என்று அலறுகிறார்கள். ஆனல் அவர்கள் பொய் சொல்லுகிறார்கள். ஏனெனில், உலகம் முழுவதும் வியாபித்துள்ள கொழுத்த மனிதர்களின் கூட்டம் தான் கலாசாரத்தை மிதித்துத் துவைத்துக் கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் காண்கிறார்கள். கலாசாரத்தைப் பாதுகாப்பதோடு அதை ஆழ்ந்து அகன்ற தாகச் செய்யும் ஆற்றல் பெற்ற சக்தி, பாட்டாளி வர்க்கம் ஒன்று தான் என்பதையும் அவர்கள் உணருகிறார்கள்.

மனிதத்தன்மை அற்ற மந்தமான குரல் ஒன்று ஆங்கிலச் சொற்களை ஊளையிடுகிறது. கொடுமைக்கு உள்ளான ஒட்டகத்தின் அலறலை ஞாபகப் படுத்துகிற, ஊது குழல் ஒன்றின் பெருங்கூச்சல் காதைச் செவிடாக்கு கிறது. இடியென ஆர்க்கிறது ஒரு முரசு. காதைத் துளைக்கும் இசைக்குழல் ஒன்று வீரிடுகிறது. ஸாக்ஸோ போனின் தவளைக் கூச்சலினால் காதுகள் கிழிபடுகின்றன; கொழுத்த தொடைகள் அசைந்தாடுகின்றன; பல்லாயிரக் கணக்கான கொழுத்த கால்கள் மாறி, மாறி குதியாட்டம் போடுகின்றன.

இறுதியாக, செவிடாக்கும் ஆரோகணத்தோடு, ஆகாயத்திலிருந்து ஒரு பெட்டி இரும்புச் சாமான்கள் உருண்டு விழுவதனால் எழும் இடியோசை போன்ற கட கட சத்தத்தோடு, கொழுத்த மனிதர்களின் சங்கீதம் நின்று விடுகிறது. மீண்டும் மங்களமான அந்த அமைதி. நினைவுகள் சொந்த நாட்டுக்குத் திரும்புகின்றன. அங் கிருந்து, 'வாஸிலி குசெர்யாவெங்கோ' என்கிற கிராமாந்தர நிருபர் ஒருவர் இப்படி எழுதியிருக்கிறார்:—

"ரோஸோஷின்ஸ்க் எனும், முந்நூறு வீடுகள் உள்ள எங்கள் கிராமத்தில் முன்பு ஒரே ஒரு பள்ளிக்கூடம் தான் இருந்தது. இப்பொழுது மூன்று இருக்கின்றன. கூட்டுறவு ஸ்டோர் ஒன்று, சங்க அறைகள் மூன்று, சங்கக் கட்டிடம் ஒன்று, வாசகசாலை, புத்தக நிலையம், கம்யூனிஸ்டுக் கட்சி, இளைஞர் ஸ்தாபனங்கள், இளைஞர் முன்னோடிகள் குழு, விவசாயம், கிராமப்புறம் சம்பந்தமான நிருபர் தொழிற் பயிற்சித் திட்டங்கள், சுவர்ப் பத்திரிகை ஒன்று – இவ் வளவும் உள்ளன. எங்கள் கிராமவாசிகள் புத்தகங்கள் வரவழைக்கிறார்கள். பல செய்திப் பத்திரிகைகளுக்கும் சஞ்சிகைகளுக்கும் சந்தா செலுத்துகிறார்கள். மாலை வேளை களில் சங்கக் கட்டிடம் நிறைந்து காணப்படும். வயது

முதிர்ந்து தாடி நரைத்தவர்களையும், கழுத்தில் சிவப்புத் துணி அணிந்துள்ள இளைஞர் முன்னோடிகளையும் அங்கே காணலாம். விவசாயிகள் – பள்ளிக்கூடத்தில் படிக்கும் சின்னப்பிள்ளைகள் கூட - அரசாங்கக் கடன் திட்டத்திற்கு உற்சாகத்தோடு பணம் உதவுகிறார்கள். எங்களிடையே 72 வயதான கிழவி ஒருத்தி இருந்தாள். அவள் இப்போது தான் இறந்து போனாள். 'இளம் கம்யூனிஸ்டுகள் கூட நானும் சேர்ந்து கொள்ள விரும்புகிறேன். ஆனால், ஐயோ!, நான் ரொம்பவும் கிழவியாகி விட்டேனே! இவை எல்லாம் ஏன் இவ்வளவு கால தாமதத்தோடு ஆரம்பித்தனவோ!' என்று அவள் சொல்வது வழக்கம். தன்னை சோவியத் முறைப்படி, கொடிகளோடு புதைக்க வேண்டும் என்று, அவள் இறப்பதற்கு முன்பு வற்புறுத்திக் கேட்டுக் கொண்டாள். இந்தப் பாட்டி நெடுந்தூரம் நடந்து சங்கத்துக்கும், வாசகசாலைக்கும், கிராம சோவியத்தின் கூட்டங்களுக்கும் ஒழுங்காகச் செல்வது வழக்கம். அவள் சிறு பெண் மாதிரியே இருந்தாள். அமெரிக்கப் பத்திரிகையான 'ஆசியா' அண்மையில் எங்கள் ஊரைப் பற்றி எழுதிய கட்டுரை ஒன்றில் இவற்றை எல்லாம் படங்களோடு வெளியிட்டிருக்கிறது.''

வேடிக்கையான இந்தப் பாட்டியம்மாள் விசேஷமாகக் குறிப்பிடத் தகுந்தவள் தான். உண்மையில் கிழக் குடியானவப் பெண் ஒருத்தி மட்டுமே கலாசாரத்தின் எடுத்துக் காட்டு ஆகிவிட மாட்டாள். எனினும், இவ்விதம் (அதை எப்படிக் கூறுவேன்!) "வாலிபம்'' பெற்றுள்ள வயோதிகக் கிராமவாசிகள் அநேகரை நான் அறிவேன். அவர்கள் எல்லோரும் ஒரு விஷயத்தையே சுட்டிக் காட்டுகிறார்கள்: ரஷ்ய மக்கள் இளைஞராக மாறிக் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சகாப்தத்திலே வாழ்ந்து, உழைப்பது உண்மையிலேயே அற்புதமான காரியம் தான்! (1928)

# ஒரு சிறந்த புத்தகம்

வெவ்வேறு தேசங்களைச் சேர்ந்த மனிதர்கள் —எல்லோரும் சமமான அறிவுடையவர்கள்தான்—எவ்வாறு ஒருவரை ஒருவர் அழித்துக் கொண்டார்கள்; கோயில் களையும், மாளிகைகளையும், வீடுகளையும் குப்பை மேடு களாக மாற்றியும், நகரங்களையும், கிராமங்களையும், கொடி முந்திரித் தோட்டங்களையும் பாழ்படுத்தியும் தங்களுடைய கடுமையான – மிக உயர்ந்த – உழைப்பின் பலன்களை எல்லாம் எவ்வாறு அவர்கள் நாசப்படுத் தினார்கள்; தங்கள் முன்னோர்களால் சிறப்பாக உழுது பண்படுத்தப்பட்ட ஆயிரமாயிரம் ஏக்கர் நிலத்தை அவர்கள் எவ்விதம் பாலைகளாக்கினார்கள்; பல்லாண்டு பல்லாண்டாக அவை எல்லாம் இரும்புச் சிராய்களின் குவியல்களினாலும், படுகொலை செய்யப்பட்ட குற்றமற்ற மக்களின் சதை அழுகிய விஷம் கலந்தும் எவ்வாறு விளங்கும் என்பதுபற்றி இந்தப் புத்தகம் (ஹென்ரி பார்புஸ்ஸேயின் 'தீ நடுவே'-"under fire") தெளிவாகவும் ஆணித்தரமாகவும், உண்மை ஒளியுடன் எடுத்துரைக் கின்றது.

தங்களைத் தாங்களே அழித்துக் கொள்வதும், கலா சாரத்தை நாசப்படுத்துவதுமான இத்தகைய புத்தியற்ற செயலில் ஈடுபட்டிருக்கும் வேளையிலேயே, தங்கள் தேகத்திலும் நரம்புகளிலும் எரிச்சல் மூட்டுகிற - அல்லது தங்கள் இதயங்களையும் மனசையும் கலக்குகிற - ஒவ்வொரு விஷயத்தையும் புத்தி பூர்வமாக ஆராயும் ஆற்றலைப் பெற்றிருக்கிறார்கள் அவர்கள். அவர்கள் கடவுளைப் பிரார்த்திக்கிறார்கள்; உண்மையாகவே பிரார்த்திக்கிறார்கள்; இந்தப் புத்தகத்தில் உள்ள ஒரு கதாபாத்திரம் குறிப்பிடுவது போல், "முட்டாள் தனமான ஒருமைப் பாட்டுடன்" பிரார்த்திக்கிறார்கள். அதன் பிறகு தங்களைத் தாங்களே வதை செய்யும் வெறி வேலையில் மீண்டும் முனைகிறார்கள்; அதே ரக "முட்டாள் தனமான ஒருமைப்பாட்டுடன்" தான். இழிவான, ரத்தமயமான, தங்களுடைய யுத்த வேலையில் கூட "கடவுள் நம் பங்கில் இருக்கிறார்" என்று உண்மையாகவே நம்புகிற ஜெர்மானியர்கள், பிரெஞ்சுக் காரர்கள் ஆகியோரின் இவ்வித பிரார்த்தனைகள் பற்றிய வர்ணனையை இப்புத்தகத்தின் 437 – 38 பக்கங்களில் வாசகர் காணலாம்.

ஆயினும் அவர்களே அப்புறம் சொல்கிறார்கள், "கடவுள் நமக்காக இரண்டு துரும்புகளைக்கூடத் தருவதில்லை!" என்று. இவ் வீரர்களும், மதாபிமானத்திற்காக உயிரைக் கொடுப்பவர்களும், சகோதரவதை புரிகிறவர்களும், "தங்களோடு தான் இருக்கிறார் என்று ஒவ்வொருவரையும் நம்பும்படி செய்து விடுகிறாரே இந்தக் கடவுள்! இவர் என்னதான் எண்ணிக்கொண்டிருக்கிறார்?" என்று தங்களையே கேட்டுக்கொள்கிறார்கள்.

இம் மனிதர்கள், எளிமையான, குழந்தைகளின் கபடற்ற தன்மையோடு—ஆயினும் பொதுவாகவே "முட்டாள் தனமான ஒருமைப்பாட்டுடன்"—எண்ணுகிறார்கள்.

ஒருவர் ரத்தத்தை மற்றவர் சிந்தும் பொழுதே, அவர்கள் சொல்கிறுர்கள்:

"நன்மையின் உருவமான கடவுள் ஒருவர் இருந்தால் உலகத்தில் துன்ப துயரங்களே இருக்க முடியாது."

இவ்வாறு வெகு தெளிவாக எண்ணி முடித்ததும், மதாபிமானத்தினுல் சாகத் துணிந்த இந்த மகான்கள் ஒருவரை ஒருவர் கொல்லும் பணியில் மறுபடியும் ஈடுபடு கிருர்கள்.

ஏன்?

எதற்காக?

அதையும் அவர்கள் அறிவார்கள். தங்களேப்பற்றியே அவர்கள் சொல்கிருர்கள்:

"ஆ! நாம் எல்லோரும் கெட்டவர்கள் அல்ல. நாம் துரதிருஷ்டம் பிடித்தவர்கள்; நாம் பரிதாபத்திற்குரிய பாவிகள். ஆனுல், நாம் ரொம்பவும் மந்த மதியினராக இருக்கிருேம்;ரொம்பவும் மந்த மதியின ராகஇருக்கிருேம்!"

எனினும்,இதை உணர்ந்துகொண்டே மானக்கேடான, மாபாதகமான, தங்கள் அழிவு வேலேயை அவர்கள் தொடர்ந்து செய்கிருர்கள்.

'கார்ப்பொரல் பெர்ட்ராண்ட்' மற்றவர்களே விட விஷயமறிந்தவர்.வருங்காலம் உணர்ந்தவரைப் போல அவர் இந்நூலில் பேசுகிருர்.

"'வருங்காலம்!' என்று அவர், தீர்க்கதரிசி பேசுவது போல், திடுமெனக் கத்தினுர். இந்தப் படுகொலே பற்றி' நமக்குப் பின் வாழப் போகின்றவர்கள் எப்படி மதிப்பிடு வார்கள்? விதி போலத் தவிர்க்க முடியாத முன்னேற்ற மானது இறுதியில் அவர்களுடைய துயருற்ற மனத்துக்கு அமைதி அளித்துவிடுமா? அப்பொழுது அவர்கள், நம்முடைய இக் கொள்ளேச் செயல்கள் பற்றி என்ன

நினைப்பார்கள்? 'புளூட்டார்க்கும்,' 'கார்னீலும்' சிருஷ்டித்துள்ள வீரர்களின் செயல்களோடு ஒப்பிடுவதா? அல்லது, போக்கிரிகள், முரட்டுக் கொள்ளைக்காரர்கள் செயல்களோடு ஒப்பிடுவதா? என்று அவற்றைச் செய்கிற நம்மாலேயே தீர்மானிக்க முடியாதவற்றைப் பற்றி—அவர்கள் எவ்வாறு மதிப்பிடுவார்கள்? ...... இப்படி எல்லாம் இருந்தாலும் கூட, நினைவில் நிறுத்துங்கள், யுத்தத்திற்கும் மேலாகத் தலைதூக்கி நிற்கின்ற ஒரு உருவம், தனது வலுவினாலும் வனப்பாலும் பிரகாசிக்கக் கூடிய ஒரு உருவம் இருக்கிறது.

"நான் ஒரு தடியின்மீது சாய்ந்து கொண்டு அவரை நோக்கி நின்றவாறே, மிக அபூர்வமாகப் பேசும் உதடுகளிலிருந்து பிறந்து, அந்தி வேளையின் அமைதியோடு கலந்து வந்த குரலைப் பருகுவது போல் கவனமாய்க் கேட்டேன். அவர் தெளிவான குரலில் கத்தினார்:

'லீப்னெக்ட்!' †

"அவர் மார்பின் குறுக்கே சேர்த்து வைத்திருந்த கைகளை இன்னும் அப்படியே பிடித்தபடி எழுந்து நின்றார். ஆழ்ந்த கருத்து நிறைந்ததாய்த் தோன்றும் ஒரு சிலையின் முகத்தைப் போலவே விளங்கிய அவர் முகம் மார்பு மீது தாழ்ந்திருந்தது. ஆனால், அவர் சிலையைப் போன்ற மோன நிலையிலிருந்து மீண்டும் விழித்தெழுந்து மறுபடியும் பேசலானார்:

"வருங்காலம்! வருங்காலம்! வருங்காலத்தின் வேலை நிகழ்காலத்தை அழித்து அகற்றுவதுதான். நாம் கற்பனை செய்யக்கூடியதை விட அதிகமான அளவில் துடைத்து அழிப்பதுதான். அருவருப்பான, வெட்ககரமான, ஏதோ ஒன்றை அழிப்பது போல அதையும் துடைத்தெறிவது தான். ஆயினும் இந்த நிகழ் காலம் – அது இருந்தே தீரும்,

† லீப்னெக்ட் (1826—1900) = ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சி அமைப்பாளர்களில் ஒருவர்.

அது இருந்தே தீரும்! இராணுவ கீர்த்தியாம்; இராணுவ மாம்; மனிதரை மந்த புத்தி பெற்ற பலியாடுகளாகவோ மேன்மையற்ற மிருகங்களாகவோ மாற்றுகிற போர்த் தொழிலாம்; வெட்கம்! வெட்கம்! ஆமாம். வெட்கம்! அதுதான் உண்மை. அந்த உண்மை அமரத்துவமானது. ஆனால், அதை நடைமுறையாக நாம் கருதுவதில்லை! முற்றிலும் உண்மையானதாக விளங்குகிற ஒரு பைபிள் உண்டாகிற போதுதான், 'பரிசுத்தமான உள்ளம் அந்தப் பரிசுத்தத்தை எல்லோருக்கும் நடை முறையில் உணர்த் தும்' என்ற உண்மை அதில் சேர்த்து எழுதப்படுகிற போதுதான் அது மெய்யாகும். நாம் இன்னும் வழிதவறிய வர்களாகவே இருக்கிறோம். வேத வாக்கியங்கள் நடை முறைக்கு வரும் காலத்திலிருந்து வெகு தூரம் விலகியே வாழ்கிறோம். நமது காலமாகிய இன்று, இந்தக் கணத் திலே இந்த உண்மை தப்பான எண்ணம் என்றே கருதப் படுகிறது. புனிதமான இந்தக் கூற்று தரும நிந்தையாகத் தான் தோன்றுகிறது!'

இதைச் சொல்லிவிட்டுச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் வருங்காலத்தைப் பற்றிய கனவுகள் அடங்கியிருந்தன. 'என்ன வேடிக்கை! சும்மா மற்றவர்களைக் கேலி பண்ணுவதற்காக எனக்கு ஆரூடமும் ஜோஸ்யமும் தெரியும் என்று சொன்னதை நினைக்கும் போது என் வயிறு வெடித்துப் போகும் போல் தோன்றுகிறது.'

ஆனால், இத்தகைய சிந்தனைகளை எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்த போதே, அமைதியும் ஆண்மையும் நிறைந்த இந்த மனிதர் — அவரது படைப் பிரிவினர் அனைவராலும் கௌரவிக்கப்பட்டு வந்தவர் — அர்த்தமற்ற கொலை புரியும் படி அவர்களை வழிநடத்திச் சென்று, சேறு நிறைந்த வயல் ஒன்றில் அழுகிக் கிடக்கும் சவங்களுக்கு நடுவில் சாகிறார்.

மனிதரை அஞ்சி நடுங்கும் அற்பக் கருவிகளாகவும், தனது கொலைகார இலட்சியங்களுக்குப் பயன்படும் படியாக அரக்க சக்தி ஒன்று உற்பத்தி செய்த அருவருக் கத் தகுந்த இயந்திரங்களாகவும் மாற்றுகிற, ஒரு நாசகார முரண்பாடு நம்மிடையே இருக்கிறது. இந்த முரண்பாடு கேலியும் கிண்டலுமாக இந் நூலில் ஒளிர்கின்றது.

மகிழ்ச்சியற்ற வீரர்கள், இந் நூலில் நம் இதயத்தைத் தொட்டு அனுதாபத்தைத் தூண்டுகிறார்கள். ஆனால், உண்மையில் அறிவுக்கும் இச்சைக்கும் இடையே ஒரு பொழுதும் ஒத்துப்போக முடியாதபடி விளங்கும் முரண் பாட்டை உடைய குஷ்டரோகிகளைப் போல்தான் அவர்கள் காணப்படுகிறார்கள். ஏற்கனவே அவர்களுடைய அறிவு, வெறுப்பூட்டும் இக் கொலையை முடிவு கட்டக் கூடிய, உலகம் முழுவதும் பரவியுள்ள இக் குற்றத்தை நிறுத்தக் கூடிய பலத்தையும் உறுதியையும் பெற்றிருப் பதாகத் தோன்றுகிறது. ஆனால், அவர்களிடம் இச்சா சக்தி இல்லை. மனிதக் கொலையின் சண்டாளத்தனம் அனைத்தையும் அவர்கள் உணர்ந்து தங்கள் உள்ளத்தில் அதை வெறுத்த போதிலும், அவர்கள் இன்னும் கொன்று கொண்டும், அழித்துக் கொண்டும், இரத்தத்திலும் சேற்றிலும் செத்துக்கொண்டும் தான் இருக்கிறார்கள்.

" 'நம்மைக் கொண்டு தான் அவர்கள் சண்டை 'போடுகிறார்கள்' என்று அவர்கள் சொல்கிறார்கள். சண்டைக்கு உரிய சாதனங்களாக அமைவது நாம்தான். சாதாரண வீரர்களின் தேகங்களையும் ஆத்மாக்களையும் கொண்டு தான் யுத்தம் நடைபெறுகிறது. பிணங்கள் கிடக்கும் நிலப் பரப்பையும் இரத்த ஆறுகளையும் ஆக்குவது நாமே தான். நாம் எல்லோரும், நம்மில் ஒவ் வொருவரும், அருவங்களாகவும் பேசாதவர்களாகவும் இருக்கிறோம். ஏனெனில், நாம் எண்ணிக்கையில் மிகப்

பெரும்பாலராக இருக்கிறோம். காலி செய்யப்பட்ட நகரங்களும், பாழ்படுத்தப்பட்ட கிராமங்களும் நமது செய்கையால் விளைந்த பாலைப் பெருவெளியாய்த் திகழ்கின்றன. ஆமாம். யுத்தம் என்பது நாம் எல்லோரும்தான்—நாம் எல்லோரும் சேர்ந்ததே தான்.'

"ஆம். அது உண்மையே. மக்கள் தான் யுத்தம். அவர்கள் இல்லையெனில், எதுவுமே இராது. வெகு தொலைவில் எங்கோ நிகழும் வெறும் சச்சரவுதான் இருக்கும். ஆனால் அதைத் தீர்மானிப்பது அவர்கள் அல்ல. அவர்களை ஆட்டுவிக்கும் எஜமானர்கள் தான்.'

"'தங்களை ஆட்டுவிக்கும் எஜமானர்கள் இனி இருக்கக் கூடாது என்பதற்காகத் தான் இன்று மக்கள் போராடிக் கொண்டிருக்கிறார்கள். இந்த யுத்தம் இருக்கிறதே இது பிரஞ்சுப் புரட்சியின் தொடர்ச்சி மாதிரி.'

"'நல்லது. அப்படியானால், நாம் பிரஷ்யர்களுக்காகவும் செயல் புரிகிறோமா?'

"'அப்படித் தான் நம்ப வேண்டியிருக்கிறது' என்று இழிமக்களில் ஒருவன் சொன்னான்.

"'மக்கள் – அவர்களே எல்லாமாக இருக்க வேண்டும் என்ற போதிலும், அவர்கள் எதுவுமே இல்லை தான்' என்று, என்னைக் கேள்வி கேட்டவன் சொன்னான். ஒரு நூற்றாண்டுக்கு முந்திய வரலாற்று ரீதியான வாக்கியம் ஒன்றை நினைவுபடுத்தும் வகையில்—அப்படிச் செய்கிறோம் என்பதை அவன் அறியாமலே – அவன் பேசினான். ஆனால் அந்த வாக்கியத்தில் கூட, உலகம் முழுவதற்கும் பொதுவான பெரிய கருத்தைப் பொருத்திப் பேசினான் அவன்.

"சித்திரவதையிலிருந்து தப்பி, நிலத்தின் வழவழப்பான ஆழத்தில் கால்களையும் கைகளையும் ஊன்றிக் கிடந்தபடியே, அவன் குஷ்டரோகம் பற்றியது போன்ற தன்

முகத்தை நிமிர்த்து, தனக்கு முன்னே பரந்து கிடந்த எல்லையிலாப் பெரு வெளியைப் பசிப்பார்வையோடு நோக்கினன்.''

அங்கே அவன் என்ன காண்பான்?

அவனது சந்ததியினர் சுதந்திரராய், அறிவுடையவர்களாய், மன உறுதி பெற்றவர்களாய் விளங்குவதை அவன் காண்பான் என்று நாம் நம்புகிறோம்.

* * *

பயங்கரமான, எனினும் உற்சாக மூட்டும், இந்தப் புத்தகம் ஹென்ரி பார்புஸ்ஸே என்பவரால் - யுத்தத்தின் பயங்கரங்களினூடும் வெறி நடுவிலும் தானே வாழ்ந்து அனுபவம் பெற்ற ஒரு மனிதரால் — எழுதப் பெற்றது. இது லியோ டால்ஸ்டாயின் கம்பீரமான புத்தகம் அல்ல. அவருடைய மேதை யுத்தத்தை இறந்த காலத்தில் என்றோ நிகழ்ந்ததாகச் சித்திரித்துள்ளது. பெர்த்தா வான் ஸட்னரின் 'யுத்தம் ஒழிக!' என்ற விசனகரமான சிருஷ்டியுமல்ல இது.—அது நல்லெண்ணத்தோடு எழுதப்பட்ட புத்தகம் தான். ஆயினும் ஒருவரையாவது நம்ப வைக்கிற அல்லது மனம் மாறச் செய்கிற சக்தி அதற்கு இல்லை.

இந்தப் புத்தகம் வேதத்தைப் போல் எளியது. தீர்க்க தரிசனமான கோபம் நிறையப் பெற்றது இது. யுத்தத்தைப் பற்றி எளிமையோடும், வைராக்கியத்தோடும், அமைதியோடும், வலிமை மிக்க உண்மைத் தன்மையோடும் பேசுகிற முதல் புத்தகம் இதுதான். யுத்தத்தைப் பற்றிக் கற்பனலங்காரத்தோடு பேசவில்லை இது. யுத்தத்தின் ரத்தக் களறியையும், ஆபாசத்தையும்,பயங்கரத்தையும்பற்றி வானவில்லின் சகல வர்ணங்களையும் கொண்டு இது தீட்டப்படவில்லை.

யுத்தத்தின் சர்வசாதாரண அன்ருட வாழ்க்கை நியதி பற்றி 'பார்புஸ்ஸே' எழுதியிருக்கிருர். அதை ஒரு வேலை என்று, குற்றமற்ற மக்கள்—மந்தபுத்தி யுடையவர்கள் என்ற ஒரு குறைபாட்டைத் தவிர இதர எல்லா விஷயங் களிலும் குற்ற மற்றவர்கள்—தங்களைத் தாங்களே அழித் துக்கொள்ளும் இழிவான வேலை என்று அவர் சித்திரிக் கிருர். கவிதா மயமான, வீரம் மிகுந்த, யுத்த சித்திரங்கள் எதுவும் இந்தப் புத்தகத்தில் இல்லை. தனிப்பட்ட வீரர் களின் சாகசங்களைக் கூறும் வர்ணனைகளும் இல்லை. பார்புஸ்ஸேயின் புத்தகத்தில் உண்மையின் அழுத்தமான கவிதை நிறைந்திருக்கிறது. மக்களின் வீரத்தை வர்ணிக் கிறது அது; நாடுகளுக்கிடையே சண்டையைத் தூண்டுகிற மகா சக்தியான மூலதனத்தால் சாவையும் அழிவையும் நிச்சயமாக அடைகிற ஆயிரம் ஆயிரம் மக்களின் லட்சோப லட்சம் மக்களின், வீரத்தைச் சித்திரிக்கிறது. இந்தப் பிசாசு தான் -நமது மத்தியிலே தோற்கடிக்க முடியாத வகையில் செயல்புரிந்து கொண்டிருக்கிற முழு உண்மையான இந்தப் பேய் தான் (மூலதனம்) பார்புஸ்ஸே புத்தகத்தில் முக்கியமான கதாபாத்திரம் ஆகும். அவர் களுடைய மனோபலத்தை அமுக்கி, அவர்கள் உள்ளத்தை, பேராசை, பொருமை, துராசை முதலியவற்றின் விஷத் தால் நிரப்பி. நாசப்படுத்தும் எண்ணங்கள் கொள்கைகள் ஆகியவற்றின் போலிப் பளபளப்பால் கோடிக்கணக்கான பாமர மக்களைக் குருடர்களாக மாற்றிவிட்டது மூல தனம் என்னும் பிசாசு. அதன் பிறகு அது அவர்களை பிரான்ஸின் வளம் மிகுந்த வயல்களுக்குள் ஓட்டியது. அங்கே அநேக தலைமுறைகளின் கடும் உழைப்பால் சிருஷ்டிக்கப்பட்டிருந்த அனைத்தையும் அவர்கள் நான்கு வருஷ காலத்தில் அழித்துப் பாழ்படுத்தி விட்டார்கள். அதன் மூலம், மனிதனுடைய மகாமோசமான விரோதி மனோபலக் குறைவும் அறிவின்மையுமே யாகும் என்பதை

அவர்கள் மற்றும் ஓர் முறை தமக்குத் தாமே நிரூபித்துக் கொண்டார்கள்.

பார்புஸ்ஸே, தனக்கு முன்னிருந்த எவரையும் விட அதிகமாக, யுத்தத்தின் இயல்பு பற்றி ஆழ்ந்து கவனித்து, மக்கள் தம்மைத் தாமே எவ்வளவு தூரம் ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் காட்டியிருக்கிறார்.

பொய், பாசாங்கு, கொடுமை, அழுக்கு, ரத்தம் ஆகிய குவியல்கள் ஒருமிக்கச் சேர்ந்தே யுத்தம். அதன் மீது விழும் உண்மை எனும் சம்மட்டியின் அடிதான் இந்நூலில் ஒவ்வொரு பக்கத்திலும் காணப்படுகிறது. இது ஒரு சோக மயமான நூல்;உண்மையை ஆணித்தரமாகக் கூறும் நூல். ஆனால், இதன் வர்ணனையில் படிந்துள்ள வியாகுலத்தின் ஊடே புதியதோர் மன விழிப்பின் சிறு சுவாலைகள் பிரகாசிக்கின்றன. இச்சுவாலைகள் உலகம் முழுவதும் பரவக்கூடிய பெருந்தீயாகப் பொங்கி எழுவதற்கு இன்னும் வெகுகாலம் ஆகாது; மூலதனம் எனும் பேயினால் சிருஷ்டிக்கப் பட்டுள்ள அழுக்கை, ரத்தத்தை, பொய்யை, பாசாங்கை எல்லாம் எரித்து, பூமியை அது சுத்தமாக்கி விடும் என்ற நம்பிக்கை நமக்கு இருக்கிறது. பார்புஸ்ஸே எந்த மக்களைக் குறித்து எழுதியிருக்கிறாரோ அவர்கள் இதற்குள்ளாகவே மனிதன் மீது கடவுளுக்கு இருக்கும் ஆதிக்கத்தைத் துணிவுடன் மறுக்கத் தொடங்கி விட்டார்கள். சகோதர மனிதர்கள் மீது இன்னொரு மனிதன் செலுத்துகிற ஆதிக்கம் எவ்வளவு குற்றமானது, வெறுப் பூட்டுவது என்பதை அவர்கள் வெட்கத்தோடும் கோபத்தோடும் சீக்கிரமே புரிந்து கொள்வார்கள் என்பதற்கு இது ஒரு நிச்சயமான அறிகுறி.

துன்பகரமான காலத்தில் நாம் வசிக்கிறோம். வாழ்க்கை சகிக்க முடியாத அளவுக்குக் கொடுமையானதாக இருக்கிறது. ஆயினும், மனிதனுள் உறையும் நல்ல

சக்திகள் எல்லாம் சுதந்திரமாக சிருஷ்டி செய்யவும், கட்டுப்பாடின்றி உழைக்கவும் விழிப்புற்று எழப்போகிற தருணத்திலேயே நாம் இருக்கிறோம். இதுதான் உண்மை. இது நமக்கு ஆறுதல் அளிப்பதோடு, நம்முள் புதிய பலத்தையும் துணிவையும் புகுத்த வேண்டும்.

**மா. கார்க்கி**

மேலே உள்ளது பதினைந்து வருஷங்களுக்கு முன்பு எழுதப்பட்டதாகும். ஐரோப்பிய முதலாளிகள் ஏராளமாக வழங்கிய ஆயுதங்களைத் தாங்கிய ரஷ்ய உற்பத்தியாளர்கள், நிலப்பிரபுக்கள் முதலியவர்களின் இராணுவங்களையும், *பிறகு கொழுப்பிலும் உணர்ச்சியிலும் தங்கள் தோழர்களாய் விளங்கியவர்களுக்கு உதவியாக ஐரோப்பிய வியாபாரிகளுக்கு அனுப்பிய போர்ப்படைகளையும் எதிர்த்து, பட்டினியால் கஷ்டப்பட்ட பாட்டாளிகளும் தொழிலாளிகளும் விவசாயிகளும் நடத்திய யுத்தத்தின் வெற்றிகரமான முடிவைக் கண்ட-துயரமும் பட்டினியும் நிறைந்த — வருஷத்தில் அது எழுதப்பட்டது. கழுதைகள் மீது சவாரி செய்து வந்த குதிரை வீரர் பகுதி ஒன்றும் அப் போர்ப்படைகளின் நடுவே காணப்பட்டது!

இப்பதினைந்து வருஷ காலத்தில், ஜார் ஆட்சியைச் சேர்ந்த ரஷ்யாவிலும் அதன் அடிமை நாடுகளிலும் உள்ள பாட்டாளி மக்கள், சலியாத-அற்புதமான உழைப்பினால் எல்லையற்றதும் கல்வி அறிவற்றதுமான மக்கள் வாழ்ந்த நிலப்பரப்பை – அரை குறை தரித்திரர்களான விவசாயிகளும் அறிவற்ற காட்டுமிராண்டிகளாகவும் பேராசை பிடித்தவர்களாகவும் விளங்கிய குட்டி முதலாளிகளும் வசித்த பிரதேசத்தை – பல தேசங்கள் கொண்ட சோஷலிஸ சகோதரத்துவ அமைப்பாக மாற்றியிருக்கிறார்கள்.

இன்று சோஷலிஸ்ட் சோவியத் யூனியனைத் தாக்க வேண்டும் என்ற அடிப்படை நோக்கத்தோடு ஒரு யுத்தம் நடத்த ஐரோப்பிய முதலாளிகள் மீண்டும் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இந்த யுத்தத்தை ஆரம்பிப்பதற்கு முன்னர் தமக்குள் ஒன்றுபட்டாக வேண்டும். அவர்களில் மிகவும் வெட்கங்கெட்டும் அறிவற்றும் விளங்குகிற கும்பல், நெப்போலியன் காட்டிய வழியைப் பின்பற்றுவதன் மூலம் ஒற்றுமையை நிலை நாட்டி விடலாம் என்று எதிர்பார்க்கிறது. தனக்கு அயலில் இருப்பவர்களைத் தாக்குவதும்; அப்புறம் தோல்வியுற்றவர்களின் கழுத்தைப் பிடித்து சோஷலிஸ்டு ராஜ்யத்தின் மீது மோதும்படி தள்ளுவதும் தான் அந்த வழியாகும். இது தெளிவும் எளிமையும் நிறைந்த திட்டம் தான். இந்தத் திட்டம் தான் எனக்குக் கழுதைகளை ஞாபகப் படுத்தியது!

கழுதைகளின் அவமானகரமான பங்கை 1914–18 யுத்தத்தில் நிறைவேற்றியவர்கள், நாம் அறிந்தபடி, ஜெர்மன் சோஷியல் டெமாக்கிரட்டுகளின் தலைவர்கள், ரஷிய மென்ஷிவிக்குகள், எஸ். ஆர். கள் குட்டி முதலாளிகளின் தலைவர்கள் பலரும் தான். இவர்களைத் தான் இந்தப் பதினைந்து வருஷகாலமாக முதலாளிகள் பாஸிஸ்டுகளாய் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த நோக்கிலிருந்து கவனிக்கும் போதுதான், பார்புஸ்ஸேயும் அவரைப் போன்ற உணர்வுள்ள பிற எழுத்தாளர்களும் எழுதிய நூல்களின் சோஷலிசப் புரட்சி ரீதியான மதிப்பு, மிகத் தெளிவாகவும் வெளிப் படையாகவும் எனக்குத் தோன்றுகிறது. இந்தப் பதினைந்து வருஷ காலத்தில், பல்லாயிரக்கணக்கான யுத்தவெறியரின்

*உள்ளங்களை அடக்கி ஒடுக்கி நிதானப் படுத்திய முதல் வரிசைப் புத்தகங்களில் ஹென்றி பார்புஸ்ஸேயின் புத்தகமும் ஒன்ருகும். இந்நாளில் நெடுகிலும் பரவி வரும் பாஸிச எதிர்ப்பு இயக்கத்தின் ஆரம்ப அமைப்பாளர்களில் ஒருவராக, பார்புஸ்ஸேயை நாம் அங்கீகரிக்க வேண்டும்.*

**மா. கார்க்கி**

*செப்டம்பர் 11, 1935*

# பழைய மனிதனும் புதிய மனிதனும்

பத்தொன்பதாம் நூற்ருண்டை 'முற்போக்கு யுகம்' என்று உயர்வாகவும் பெருமையாகவும் அழைக்கிருர்கள். அது பொருத்தமானது தான். ஏனெனில், அந்தக் கால கட்டத்தில் தான் அறிவும், இயற்கையின் தன்மைகள், நிகழ்ச்சிகள் பற்றிய விஞ்ஞான ஆராய்ச்சியும், அதன் அடிப்படைச் சக்திகளைப் பொருளாதார நலன்களுக்குப் பயன்படுமாறு கட்டுப் படுத்தும் முயற்சியும், முன் எக் காலத்திலும் இல்லாத வகையில் மிகவும் உச்ச நிலையை அடைந்தன. 'தொழில் முறை அற்புதங்கள்' பலவற்றையும் உற்பத்தி செய்துள்ளன. தாவரங்கள், மிருகங்கள் முதலியவற்ருேடு தொடர்பு உடைய நுண் ணுயிர்களின் வாழ்க்கையை ஆராய்ந்து, கண் ணுக்குப் புலஞகாத நோய்க் கிருமிகளின் தனி உலகம் பற்றிய உண்மைகளை மனிதனது அறிவு கண்டு பிடித்தது. – இந்த ஆராய்ச்சி முற்றிலும் பயன்படுத்தப்படவில்லை. சமுதாய அமைப்பு முறைகளின் காரணமாக வளர்ந்துவிட்ட வெட்க கரமான, குறைகூறும் குணமுடைய, பழமை மோகம் தான் இதற்குக் காரணமாகும்.

"மனித சிந்தனையின் பருந்துப் பாய்ச்சல் அவனுடைய ஆற்றலை, கம்பீரமாகவும் பெருமிதத்தோடும் அவனுக்குப் புலப்படுத்தியது இந்த நூற்றாண்டிலே தான்." வாலஸ் என்பார் எழுதிய 'இருபதாம் நூற்றாண்டு' என்ற புத்தகத்தின் ரஷ்ய மொழி பெயர்ப்பில் இவ்வாறு குறிப்பிடப் பட்டிருக்கிறது.

ஆனால் விஞ்ஞான பூர்வமான சிந்தனையோடு, மற்றொரு விதமான எண்ணப் போக்கும் வேகமாக வேலை செய்து வந்திருக்கிறது. அது முதலாளிகளிடையே, 'வெல்ட்ஷ்மெர்ட்ஸ்' என்று பெயர் பெற்ற மனப்பண்பை — நம்பிக்கை வறட்சியையும் இருண்ட நோக்கையுமே போதிக்கிற கவித்துவமும் தத்துவமும் கொண்ட மனோ பாவத்தை — விளைவித்தது. 1812 – ம் ஆண்டில் லார்டு பைரன் தமது 'சைல்ட் ஹெரால்ட்' எனும் காவியத்தின் முதல் காண்டத்தை வெளியிட்டார். அதற்குச் சிறிது காலத்துக்குப் பின்னர் தத்துவ ஞானியும் கவிஞரு மான ஜியாகொமோ லியோபார்டி (மொனால்டா பிரபு) தமது தத்துவத்தை உபதேசிக்கலானார். 'அறிவின் ஆற்றல் இன்மையை அம்பலப்படுத்துவதுதான் ஞானம் ஆகும்; எல்லாம் மாயையே; துயரமும் மரணமும்தான் தனிப் பெரும் உண்மைகளாகும்' என்று அவர் போதித்தார்.

பார்க்கப்போனால், இது புதிய கருத்து அல்ல; மத வாதிகள் அதை வெகு அழகான சூத்திரங்களில் அமைத் திருக்கிறார்கள். புத்தர் அதையே தான் போதித்தார். தாமஸ் மூர், ஜீன் ஜாக்ஸ் ரூஸோ முதல், பேரறிவும் ஆற்றலும் வாய்ந்த மற்றும் பலர் வரை, எவ்வளவோ மனிதர்களது உள்ளச் சுமையாக அது நிலைத்து நின்றிருக் கிறது. முதலாளித்துவத்தினால் அடக்கப் பெற்று விட்ட தனால், நிலப்பிரபுக்கள் கொண்டிருந்த துக்கம் தான்

பைரனும் லியோபார்டியும் அந்தக் கருத்தைப் புதுப்பித்த தற்கு உரிய காரணமாகும் என்பது கொஞ்சமும் சரியல்ல. ஆனால்,பிரபுத்துவத்தின் நிலத்தோடு சேர்த்து அதனுடைய எண்ணங்கள் சிலவற்றையும் முதலாளிகள் ஏற்றுக் கொண்டார்கள் என்பது சொல்லாமலே புரிந்து கொள்ளக் கூடியதாகும். ஏனெனில், அவை பிறப்பதற்கு ஏதுவாக அமைந்த நிலைமைகள் அழிந்தாலும், தாம் அழியாது நின்று மற்றவைகளைப் பாழ்படுத்தக் கூடிய சக்தியை எண்ணங்கள் பெற்றிருக்கின்றன.

அசைக்க முடியாத பழமைப்பற்றுதான் இந்தத் தத்துவத்தின் ஊன்று கோல் ஆகும். உயிர் வாழ்வதின் அர்த்தமற்ற தன்மையை அழுத்தமாக எடுத்துச் சொல்வதன் மூலம், ஆழ்ந்து நோக்கும் பண்பு அற்றவரின் இதயத் தேவைகளை அது திருப்திப் படுத்துகிறது. அமைதியை ஆர்வத்தோடு நாடுகிறவர்களுக்கு அமைதி அளிக்கிறது. இக் கருத்துக்களை ஏற்றுக்கொண்டவர்களின் கூட்டம் மிகமிகச் சிறியது; குறுகிய எல்லைக்குள் ஒடுங்கியது; இக்கூட்டத்தில் சுய சிந்தனையோ, எண்ணத் துணிச்சலோ வளமாகப் பெற்றவர்களும் இல்லை. இத் தத்துவத்தின் பிடிவாதப் பண்பே இதற்குக் காரணமாகும்.

பத்தொன்பதாம் நூற்றூண்டில் நம்பிக்கை வறட்சி யும் இருள் நோக்கும் உடைய கருத்துக்களை ஐரோப்பாவில் பரப்பி வளர்ப்பதில் ஜெர்மனியர்தான் சலியாதவர்களாக விளங்கினார்கள். ஷோபனர், ஹார்ட்மேன் ஆகியோரது புத்தமத தத்துவப் பிரசாரம் இருக்கட்டும். மாக்ஸ் ஸ்டர்னர் என்கிற அராஜகவாதி, உண்மையில் தாம் அழுத்தமான இருள்நோக்குக் கொள்கையினர் (பெஸி மிஸ்ட்) என்பதைத் தமது 'நான் எனும் உணர்வும் அவனது உடைமையும்' (The Ego And His Own) எனும் புத்தகத்தில் தெளிவு படுத்தினார். பிரடரிக் நீட்ஷே

பற்றியும் இதையே தான் கூற வேண்டும். 'அதிமனிதன்' அவதரிக்க வேண்டும் என்கிற முதலாளி வர்க்க ஏக்கத்தைப் பிரதிபலிப்பவர் இவர். இந்த ஏக்கத்தைப் பிரதிபலிப்பவர்கள் மகா பிரெடரிக் மன்னனை வீரனாக ஏற்றுக் கொண்டார்கள். பின்னர் அக்கருத்துச் சீரழிந்து பிஸ்மார்க்கையும், மந்த புத்தியுடைய இரண்டாவது வில்ஹெல்ம் மன்னனையும் வீரர்களாக்கியது. கடைசியில், பைத்தியக்காரனை ஹிட்லரைத் தலைவனாக ஏற்றுக் கொண்டு விட்டது.

முதல் இருபது வருடகாலம் ஐரோப்பிய முதலாளிகளுக்கு ஒரு 'மாவீரனின்' எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவன் நெப்போலியன் போனபார்ட்; இவனைச் 'சிறிய தளபதி' என்று அழைப்பார்கள். ஒரு 'மாவீரன்' மீது நம்பிக்கை வைப்பது மத்தியதர வர்க்கத்தினருக்கு எவ்வளவு அவசியமானது என்பதையும், அந்த வீரனின் வீழ்ச்சி எவ்வளவு நிச்சயமானது என்பதையும் திட்டமாகவும் அழுத்தமாகவும் தன் வாழ்க்கையின் மூலம் எடுத்துக் காட்டியவன் போனபார்ட் தான். என்றாலும் கூட, அவனுடைய விபரீதமான போக்கு, பல தலைமுறைகளுக்கு மத்தியதர வர்க்கத்தினரின் எண்ணங்களையும், அபிப்பிராயங்களையும் எவ்வாறு பாதித்துள்ளது என்பதைப் பற்றி வேண்டிய அளவு ஆராய்ச்சி செய்யப்படவில்லை.

சரித்திரத்தை நிர்மாணிப்பவன் என்கிற முறையில் 'வீரனின்' பாத்திரம் என்ன என்பது பற்றிய மிகவும் அலங்காரமாகவும் ஓரளவு உணர்ச்சி வெறியோடும் கார்லைல் ஆராய்ந்து எழுதியுள்ளார்.

அவர் கூற்றை அனைவரும் நம்பினர். ஆனால், கிளமன்சோ, சர்ச்சில், உட்ரோ வில்சன், சேம்பர்லேன், இன்னும் இவர்களைப் போன்ற இதர "நாகரிகம் பெற்ற

மனித இனத்தின் தலைவர்களை'' (இவ்வாறு தான் அவர் களுடைய கையாட்கள் அவர்களை அழைக்கிறார்கள்) வீரர்கள் என்று ஏற்றுக்கொள்ளுமளவுக்கு 'வீரன்' என்ற சொல்லின் மதிப்புத் தாழ்ந்துவிட்டது,

தங்களுக்குச் சேவை செய்யும் வீரர்கள் விஷயத் தில் அவர்களுடைய எஜமானர்கள் எவ்வளவோ அடக்கமாகத் தான் இருக்கிறார்கள். ஏனெனில் 1914-18 வருடப் படுகொலைக் களத்தை சிருஷ்டித்து விட்ட எஜமானர் கோஷ்டிகளைச் சேர்ந்த ஒவ்வொரு குழுவினரும் 'யுத்தம் வீரர்களைத் தோற்றுவிக்கிறது'' என்று அறிந் திருந்த காரணத்தால், ஒரு மகா அலெக்சாந்தரை, அல்லது ஒரு டாமர்லேனை, அல்லது குறைந்தபட்சம் ஒரு நெப்போலியனையாவது பெற்றுவிடலாம் என்று எதிர் பார்த்தனர். ஆனால் அவர்களுக்கு வந்து வாய்ந்ததெல்லாம் ஜாப்ரேக்களும், பெர்ஷிங்குகளும். லூடன்டோர்புகளும் தான்.

மீண்டும் நாம் 'எடுத்துக் கொண்ட விஷயத்துக்கு' வருவோம் –'இணைவிழைச்சும் குணநலமும்' என்ற இருள் மயமான புத்தகத்தின் ஆசிரியரான வீய்னிங்கர், 'ஐரோப் பின் வீழ்ச்சி', 'மனிதனும், தொழில் நுணுக்கமும்' ஆகிய புத்தகங்களின் ஆசிரியரான ஸ்பெங்ளர் ஆகிய இருவரும் ஜெர்மானிய 'இருள் நோக்கு வாதி'களே. நம்பிக்கை வறட்சியில் ஊறிப் போனவர்களே.

'ஐரோப்பாவின் வீழ்ச்சி' அதாவது, அதனுடைய ஆன்மீகச் சிரழிவு, அதன் திறமைகள் நலிதல், மனிதரை இணைக்கும் கருத்துக்களின் வறட்சி - ஆகியவை எல்லாம் ஐரோப்பாவுக்கு மாத்திரமே சிறப்பாக ஏற்பட்ட விளைவு கள் அல்ல. இரண்டு அமெரிக்காக்களுக்கும், ஏன், உலகம் பூராவுக்குமே பொதுவான விளைவுகளே. முதலாளித்துவ வானில் பிரகாசிக்கும் நட்சத்திரங்கள் மங்கிவிட்டன!

இங்கிலாந்திலுள்ள பார்ஸைட்டுகளும்*, ஜெர்மனியில் உள்ள பூடன்புருக்குகளும், யுனைடெட் ஸ்டேட்ஸில் உள்ள பேபிட்டுகளும்† 'வீரர்'களைப் பிறப்பிக்க முடியாத மலட்டுத் தன்மையுடையவர்கள் என்பது தெளிவாகி விட்டது. ஆகவே, அல்பசாகசச் செயல் புரியும் துணிச்சல் காரர்களை, வீரர்களாகப் பட்டம் கட்டவேண்டிய அவசியம் முதலாளித்துவத்துக்கு நேர்ந்து விட்டது.

இங்கிலாந்தில் தாக்கரேயின் பயனுள்ள விமர்சனத்தை, உற்சாக மனப்பண்பு உடைய டிக்கன்ஸின் தெளிவற்ற குதூகலம் மூடி மறைந்து விட்டது. சிறிது காலத்துக்கு முன்பு ஏற்றிப் போற்றப்பட்ட தாமஸ் ஹார்டியின் ஏக்க ஓலம் தற்போது ஒடுங்கிவிட்டது. இப்பொழுதோ, ரிச்சார்ட் ஆல்டிங்டனின் "வீரனின் மரணம்" போன்ற பயங்கரமான புத்தகங்கள் தோன்றுவது சாத்தியமாகி விட்டது. பிரான்சின் இருபதாம்நூற்றுண்டு இலக்கியமோ கால்ஸ்வொர்த்தி, தாமஸ் மேன், ஸிங்க்ளேர் லூயி ஆகியோர் சிருஷ்டித்த கலைப்பண்புடைய பொது நியதி களுக்குச் சமமாக வரவேயில்லை, 'ஜீன்கிறிஸ்தோவ்' எனும் வீரகாவியத்தின் ஆசிரியர் – துணிவும் நேர்மையும் உடைய மனிதர் - ரோமன்ரோலான் தமது நாட்டுக்கு வெளியே வாழவேண்டியதாயிற்று. முதலாளிகளின் மிருகத்தன மான வக்கிர புத்தி அவரை விரட்டி அடித்தது. அதனுல் பிரான்சுக்கு நஷ்டம்; தொழிலாளர் உலகத்துக்கு லாபம்! அளவுக்கு அதிகமான உணவை விழுங்கி விட்டு, அதை ஜீரணிக்க இயலாமல் அவதிப்படுகிறது ஒரு மலைப்பாம்பு; ஆயினும், தான் மேலும் விழுங்க முடியாமல் விட்டு

*பார்ஸைட்டுகள் = கால்ஸ் வொர்த்தியின் Forsyte Saga என்னும் நூலின் முக்கிய பாத்திரங்கள்; †பாபிட்டுகள் = ஸிங்க்ளேர் லூயி எழுதிய Babbit என்னும் நூலின் கதாநாயகன். இவர்கள் எல்லாம் மத்தியதரவர்க்க கதா நாயகர்கள்.

வைத்திருக்கிற ஒவ்வொன்றையும் தனது இனத்தைச் சேர்ந்த இதர பிராணிகள் விழுங்கி விடுமே என்று அது பயப்படுகிறது. அந்தப் பாம்பு மாதிரிதான் பிரான்ஸ் தேசத்தின் முதலாளி வாழ்கிறான். வளமான புதிய நிலப்பகுதிகளைப் பற்றிக் கொள்ள வேண்டும்; காலனி நாடுகளில் உள்ள மக்களை அடிமைப் படுத்த வேண்டும் என்று ஆசைப்படும் வியாபாரிகளின் வழக்கமான முட்டாள்தனமான ஆர்வத்தை, அவர்களது அறிவின்மை தடுத்து நிறுத்துவதில்லை. ஆனால் பணத்தின் மீது அவர்கள் கொண்டிருக்கும் பேராசை, அவர்களுடைய மூளையை மேலும் அழுக வைத்து, மழுங்கடிக்கிறது. வியாபாரிகள் சிருஷ்டித்து விட்ட ஜனவிரோதமான நிலைமைகளுக்கிடையே வாழ வெட்கப்படுகிறவர்களும், 'வீரர்கள்' மீதும் தனிமனிதர்கள் மீதும் நம்பிக்கை வைத்ததனாலேயே வியாபாரிகள் தோற்றுப் போனார்கள், என்பதை உணர்ந்தவர்களும் ஐரோப்பாவில் அதிகமாகி வருகிறார்கள். இருந்த போதிலும் ஐரோப்பாவின் ஆன்மசூனியம் ஆச்சர்யமான காட்சியாகத் தான் தோன்றுகிறது.

ஐரோப்பாவின் சமூக கலாசாரம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் சாதித்தது என்ன? - இக் கேள்விக்குப் பதில் ஒன்றே ஒன்று தான். தொழிலாளி வர்க்கத்தின் ஒப்புவமையற்ற வறுமைக்குச் செல்வக் குவியல் தான் காரணம் என்பது பரிபூரணமாகப் புலனாகும் வகையில், அருவருக்கத்தக்க அளவுக்கு ஐரோப்பிய சமூக கலாசாரம் கொழுத்துப்போய் விட்டது. தொழிலாளி வர்க்கத்துக்கும் முதலாளி வர்க்கத்துக்கும் இடையிலே மிகவும் ஆழமான அகழி ஏற்பட்டு விட்டது. முதலாளிகள் அதனுள் இடறி விழுவதைக் கொஞ்சமும் தவிர்க்க முடியாது!

நிச்சயமாக முதலாளித்துவத்துக்குச் சரியான இடம் அதுவே. அதனால் 'கலாசாரம்' பாதிக்கப்படுமா? மனித

னுடைய கலாசார வளர்ச்சியின் வரலாற்றிலே தாமதம் விளைவுக்கும் ஓய்வு காலமாகப் புரட்சிகள் ஒருபோதும் விளங்கியதில்லை. உண்மையில் புரட்சியானது புதிய ஆக்க சக்திகளைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாகத்தான் இருந்திருக்கிறது.

ரோமனேவ் ஜார் அரசர்களும், அரைகுறைப் படிப்பு பெற்ற சில்லறை வியாபாரிகளும் ரஷ்ய நாட்டின் பொக்கிஷங்களை ஐரோப்பிய முதலாளிகளுக்குப் பண்ட மாற்றுச் செய்து வாழ்ந்தார்கள். பாட்டாளிகளையும் தொழிலாளிகளையும் கொள்ளையடித்து வந்தார்கள். அறிவொளியை அணைக்கும் குணமுடைய மூட மதகுருக்களின் கைப்பாவைகளாக மாறினர்கள். அத்தகையோரின் செல்வாக்கு மேலோங்கி யிருந்த பழைய ரஷ்யாவின் எல்லைகளுக்குள் இப்பொழுது கலாசாரப் புரட்சிச் செயல் முறை, வேகமாக வளர்ந்து கொண்டிருக்கிறது.

இந்த இடத்தில் எனது வாழ்க்கையைப் பற்றிச் சிந்தித்துப் பார்ப்பது பொருத்தமாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன். விஷயம் தெரிந்த உண்மையான சாட்சி என்ற தகுதியை எனக்கு என் வாழ்வு அளிக்கிறது.

சுமார் ஐம்பது வருட காலம் நான் பல வர்க்கங்களைச் சேர்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளைக் கவனித்து வந்திருக்கிறேன். எனது உடனடியான அபிப்பிராயங்கள் மீது அதிகப்படியான நம்பிக்கை வைத்து விடாமல் என் நாட்டு மக்களின் வரலாற்றைப் படித்து, மேல் நாட்டு மக்களின் சரித்திரத்தோடு ஒப்பு நோக்கினேன். நடுவு நிலைமையோடு நான் ஆராய்ந்தேன். மன உணர்வுகளை விலக்கி விட்டு வெறும் நடுவு நிலைமையோடு ஆராய்வது, வாழ்வின் சாதாரண 'உண்மைகளை'க்கூட உணர்ந்து கொள்ள விடாமல் என்னைத் தடுக்கிறது; நேர்வழியில்

உலக ஞானம் பெறுவதினின்றும் என்னைத் திருப்பி விடுகிறது என்பதை நான் உணர்ந்த போதிலும், நான் நடுவு நிலை முறையையே கையாண்டு வந்தேன்.

இயல்பாகவே ஒன்றுக்கொன்று ஒவ்வாத முறையில் உள்ள பல விஷயங்களையும், ஒருமைப்படுத்த முடியாது போனாலும் கூட, குறைந்த பட்சம் சமாதான நிலையிலாவது சேர்த்து வைக்கலாமே என்று பெரும்பான்மை மக்களிடத்தில் சகஜமாகக் காணப்படுகிற ஒரு தூண்டுதலே இந்த மனோபாவத்தின் அடித்தளத்தில் உறைகின்றது; இதைக் கிரகிப்பது கடினமாகும். ஒத்துப் போகும் சித்தாந்தம் கண்டுபிடிக்கப்பட்ட நாட்டில் உள்ள மக்கள் இதை நன்கு உணர வேண்டும். ஆனால் அங்கோ ஒரு சில அறிஞர்கள்—வாழ்வின் ரகசியங்களைத் தெளிவு படுத்தும் நிபுணர்கள்—மட்டுமே, 1914—18 ஆண்டுகளில் நிகழ்ந்த இழிவான யுத்தத்துக்குப் பின்னர், முரண்பாடுகளைப் பொருத்தி வைக்க முடியாது; அவற்றின் காரணங்களைத் தெளிவு படுத்தும் ஆராய்ச்சிதான் தேவை என்பதைப் புரிந்து கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள்.

ஜார் கால ரஷ்யாவில் வசித்த தொழிலாளி, விவசாயி ஆகியோருடைய வாழ்க்கை, ஐரோப்பாவில் உள்ள எந்த ஒரு தொழிலாளி வர்க்கத்தின் வாழ்க்கையோடும் ஒப்பிட முடியாத அளவுக்கு மிகவும் கடுமையாக இருந்தது என்று நான் உறுதியாகக் கூறுவேன். ரஷ்யாவின் தொழிலாளி வர்க்கம் மிகுதியும் அடிமைப்படுத்தப்பட்டு அறியாமை நிலையில் அவதியுற்றது.

மனித உள்ளத்தின் மீதும், அறிவின் மீதும் அரசாங்கமும் மதமும் பிரயோகித்து வந்த ஆதிக்கம் ஐரோப்பாவை விட ரஷ்யாவில் அதிகக் கொடியதாக இருந்தது. ரஷ்யாவில் அழிந்துபட்டதைப் போல வேறு எந்த இடத்

திலும் ஆற்றல் நிறைந்த அறிவாளிகள் இவ்வளவு அதிக மாகச் சீரழிந்து மரணத்தை எய்தியதில்லை. நான் 'என் நாட்டின் கண்மூடித்தனமான தேச பக்தன்' அல்லன். 'மக்களின் ஆத்மா'வோடு எனக்கு நெருங்கிய பழக்கம் உண்டு என்ற உறுதி எனக்கு உண்டு. இந்த 'விசாலமான' பெரிய ஆத்மா, வாழ்வின் ஆதி நிலையில் பிறந்த இருண்ட அவலட்சணமான மூட நம்பிக்கைகளினாலும், அநாகரிக மான தப்பெண்ணங்களாலும் நிறைந்து விஷமேறிப் போயிருந்தது. அதை துர்கனேவ், டால்ஸ்டாய், டாஸ்டாவ்ஸ்கியின் நூல்களின் மூலம் எவரும் கற்றறிய முடியாது. ஆனால் அதனுடைய மக்கள் இலக்கியத் திலிருந்து — நாட்டுப் பாடல்கள், நாடோடிக் கதைகள், பழமொழிகள், பழங்கதைகளிலிருந்தும் அந் நாட்டுக்கு உரிய சடங்குகள், மத ஆசாரங்களிலிருந்தும், அதன் சம்பிரதாயங்கள், கைத் தொழில்கள், தொழிற் கலைகள் ஆகியவற்றிலிருந்தும்தான் தெரிந்து கொள்ள வேண்டும். மக்களின் பயங்கரமான அறியாமை பற்றியும், மக்களின் சோகத்தைப் பற்றியும் முழுமையாகத் தெரிந்துகொள்ள இவைதான் பயன்படக் கூடியவை. அதே சமயத்தில் அந் நாட்டின் ஆச்சரியகரமான, பல்வேறு பண்புகளும் ஆழ்ந்த தன்மையும் கொண்ட ஆற்றல் பற்றியும் எடுத் துச் சொல்லக் கூடியவை இவையே.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்த பணக்கார எழுத்தாளர்கள் விவசாயிகளைப் பற்றிக் கருணையோடு எழுதினார்கள்; இளகிய உள்ளம் பெற்றவர்கள், இசைப்பியர்கள், கனவு காணும் சுபாவத் தினர், விதிக்குக் கட்டுப்பட்டவர்கள்- 'தெய்வப் பிறவிகள்,' -என்றெல்லாம் அவர்களைச் சித்திரித்தார்கள். ஆனால் உண்மையில் ரஷ்ய விவசாயியும் மனிதப் பிறவிதான், அவன் மீது சுமத்துப்பட்டுள்ள அடிமைத் தனத்தை—

பண்ணை அடிமை முறையை—அகற்ற வேண்டிய காலம் வந்து விட்டது என்பதை எடுத்துச் சொல்லி ஆட்சியினரை வற்புறுத்தக் கூடிய சக்தி தான் அப்பொழுது தேவையாக இருந்தது. இந்த ஆதிகால மனிதாபிமானப் பிரசாரம் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பாதியில் தோன்றிய முதலாளித்துவ அறிஞர்களால் தொடர்ந்து கையாளப் பட்டது, இவர்களும் ரஷ்ய விவசாயியைத் துர்கனேவும் டால்ஸ்டாயும் மற்றவர்களும் சித்திரித்துக் காட்டியது போலவே, பிரகாசமும் நுண்மையும் நிறைந்த வர்ணங் களில் சித்திரித்தார்கள். மேலும் அதிகமாக உற்பத்தி செய்யக்கூடிய உழைப்பாளி தேவையிருந்ததால் தான் விவசாயி விடுதலை அடையவேண்டும் என்று செல்வச் சீமான்கள் ஆசைப்பட்டார்கள். எதேச்சாதிகார ஆட்சி யோடு நிகழ்த்தும் போராட்டத்தில் விவசாயியின் வலிமையைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்தோடு தான் முதலாளிகள் அவனது விடுதலையை விரும்பினார்கள்,

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் தொழில் அபிவிருத்தி ஏற்படவும், முதலாளிகளிடையே "சட்ட பூர்வமான மார்க்ஸீய வாதிகள்" தோன்றினார்கள். முதலாளி வர்க்கத்தினரால் பழக்கி வளர்க்கப்படும் வீட்டுப் பறவை இனத்தில் ஒரு இனம்தான் இவர்களும்; ரோம் நகரத்தைக் காப்பாற்றியதாகச் சொல்லப்படும் வாத்துக்களை ஒத்தவர்கள் தான் இவர்கள். "காவியச் சித்திரமான" விவசாயியை "பாக்டரியாகிய கொதிக்கும் கொப்பரையில்" போட்டு சுத்தப்படுத்த வேண்டியது அவசியம் என்று இவர்கள் பேசினார்கள். அந்தச் சந்தர்ப் பத்தில் தான் எதேச்சாதிகார அரசாங்கம், 'காலத்தின் அதிகாரக் குரலுக்கு' இணங்கி மாதா கோயில் பிரதேசம் தோறும் பள்ளிக்கூடங்கள் அமைத்தது. 'ஸெம்ஸ்ட்வோ'

எனப்படும் மக்களின் பள்ளிக்கூடங்களுக்குப் போட்டி யாக அமைக்கப்பட்ட இப் பள்ளிக்கூடங்களில் கிராமப் பாதிரிகளே ஆசிரியர்களாகப் பணி புரிந்தார்கள். இவற் ருேடு கூட, விவசாயி சம்பந்தமாக இலக்கியக் கண்ணேட் டத்தில் கூரிய மாறுதல் ஒன்று ஏற்பட்டது. இலக்கிய உலகில் மென்மையான இதயம் பெற்ற, இசை மயமான, கனவு காணும் சுபாவமுடைய விவசாயி மறைந்து விட் டான். செகாவும், பூனினும் மற்றுமுள்ள எழுத்தாளர் களும் சித்திரித்த முரட்டுத் தனமான, மதுவில் மூழ்கி நனைந்த, விசித்திரமான விவசாயிகள் தோன்றினர்கள்.

யதார்த்த வாழ்வில், அப்பொழுது இத்தகைய மாறுதல் ஏற்பட்டது என்று எண்ணுவதற்கு நான் தயாராக இல்லை. ஆனல், இருபதாம் நூற்ருண்டின் ஆரம்ப கால இலக்கியத்தில் இம் மாறுதல் ஏற்படத் தான் செய்தது. இந்த இலக்கிய உருவ மாற்றம், கலை சமூகத்தை விட்டுத் தனித்து நிற்பது என்கிற கொள் கைக்கு மிகுதியும் ஆதரவான அபிப்பிராயத்தைத் தர வில்லை. ஆனல், 'சுதந்திர மனேபாவம் பெற்ற தனிமனிதன்' குரலுக்கும் அவனுடைய வர்க்கத்தின் குரலுக்கும் உள்ள ஒற்றுமையைத்தான் இது வெகு அழுத்தமாகச் சுட்டிக் காட்டுகிறது. அறிவுறுத்தி இணங்க வைக்கும் எண்ணத்துக்குப் பதிலாக, இணங்கி நடந்து மகிழ்விக்கும் எண்ணம் இருப்பதையும் இது காட்டுகிறது.

ஆகவே, இருபதாம் நூற்ருண்டில் விவசாயியைப் பற்றி மிகவும் கவர்ச்சியற்ற இலக்கியச் சித்திரத்தைத் தான் முதலாளிகள் பெற்றிருந்தார்கள். 1905—07 ஆண்டு களில், இச் சித்திரத்துக்கு உரிய மூல புருஷன் (விவசாயி) நிலத்தைத் தனது சொந்த உபயோகத்துக்காகப் பண் படுத்தத் தீர்மானித்து, நிலப்பிரபுக்களின் மாளிகைகளைத்

தியிட்டுக் கொளுத்தவும் இடித்து நொறுக்கவும் ஆரம்பித்தான். ஆனால், அவன் தொழிலாளிகளை—'வேலை நிறுத்தம் செய்தவர்களை' — சந்தேகத்தோடும் அதிக நம்பிக்கை இல்லாத மனத்தோடும் தான் கவனித்து வந்தான். எனினும், 1917—ல் தொழிலாளி வர்க்கம் பற்றிய உண்மையை அவன் உணர்ந்துகொண்டான். அப்பொழுது அவன், தனது துப்பாக்கிச் சனியனை (பயனெட்) தரையில் ஊன்றிக் கொண்டு, ஜெர்மனியில் உள்ள தொழிலாளர்களையும் விவசாயிகளையும் அழிக்க மறுத்து விட்டான் என்பதை நாம் அறிவோம்.

ஜெர்மானிய ராணுவம், 'வெற்றி பெற்ற உரிமை' என்ற சாக்கில் ரஷ்ய விவசாயியைப் பூரணமாகக் கொள்ளையடித்தது. அவனது விசித்திரப் போக்கினால் ஆத்திர மூட்டப்பட்ட ஐரோப்பிய முதலாளிகள், அடக்கு முறையை எதிர்த்துக் கிளம்பி விட்ட ரஷ்யர்களை ஒடுக்கவும் அழிக்கவும் தங்கள் விவசாயிகளையும் தொழிலாளிகளையும் அனுப்பினார்கள். இதையும் நாம் அறிவோம். இந்தக் கொடும் பாதகச் செயல் ரஷ்யாவில் மிதவாதிகளாகவும் தீவிரவாதிகளாகவும் விளங்கிய 'அறிஞர்'களில் பெரும்பான்மையினரின் ஆதரவைப் பெற்றிருந்தது. அவர்கள் முதலாளித்துவத்தைப் பாதுகாக்கக் கிளம்பி யிருந்தார்கள்; சோவியத் ஆட்சியைக் கவிழ்ப்பதற்காக மறைமுகமான வேலைகள் செய்தார்கள். அதற்கு எதிராக சதித் திட்டங்கள் வகுத்தார்கள். தொழிலாளர்கள் விவசாயிகள் ஆகியோரின் தலைவர்களுக்கு எதிராக பயங்கரமான நடவடிக்கைகளில் ஈடுபட்டார்கள். லெனின் மீது சுடப்பட்ட குண்டு தங்களுடைய உண்மையான நண்பரும் தலைவரும் யார் என்பதைத் தொழிலாளி, விவசாயி மக்களுக்களுக்கு எடுத்துக் காட்டியது; அவர்களுடைய எதிரிகளின் படு மோசமான அயோக்கியத்தனத்தை அம்பலப்படுத்தியது;

அறிவுலகத்தின் இந்தப் பகுதியினர் மீது தொழிலாளி விவசாயிகளுக்கிருந்த விரோதத்தை அது கிளறி விட்டது. அந்த விரோதம் நியாயமானதுதான் என்பதை 'அறிஞர்' களின் கொடும் பாதகம் நிரூபித்தது. ஐரோப்பிய அறிவாளிகள் தங்கள் சொந்த நலனுக்காக இதிலிருந்து ஒரு பாடம் கற்றுக் கொள்ளலாம்!

★ ★ ★

அதற்குப் பிறகு பதினைந்து வருடங்கள் கழிந்து விட்டன.

இந்தக் காலத்தில் சோவியத் யூனியனின் சாதனைகள் என்ன? தொழில் முறைக்கு உரிய வழிவகைகளில் பிற் போக்கான நிலையிலிருந்த ஒரு நாட்டை – (அந்த நாட்டின் ஆதிகாலப் பொருளாதாரம் ஐரோப்பிய முதலாளித்துவ யுத்தத்தினுல் முற்றிலும் சிதைக்கப்பட்டிருந்தது. அதைத் தொடர்ந்து,சொந்த நாட்டின் கொடியவர்களையும் ஐரோப் பாவின் கயவர்களையும் எதிர்த்து தொழிலாளர் வர்க்கம் போரிட்ட உள்நாட்டு யுத்தம் நிகழ்ந்தது. அந்த யுத்தத்தில் தொழிலாளர்கள் கலாசார உரிமைக்காகப் போரடினுர்கள். கொள்ளையடித்துக் கொழுக்கும் முதலாளிகளின் உரிமை யைப் பாதுகாப்பதற்காக அறிவாளிகள் போராடி ஞர்கள்)—தொழில் ரீதியில் உயர்த்திய பிரம்மாண்டமான சாதனையைப் பற்றி நான் பேசப் போவதில்லை.

அதற்குப் பதிலாக, இந்தப் பதினைந்து வருட காலத்தில் சர்வகலாசாலைகள், விஞ்ஞான ஆராய்ச்சி நிலையங்கள் ஆகியவற்றின் விரிவான அபிவிருத்தியைச் சுட்டிக்காட்டு வேன். இனி வரவிருக்கும் பல நூற்றுண்டுகளுக்கு நாட்டின் பொருளாதார, கலாசார வளர்ச்சிக்கு உறுதி அளிக்கக் கூடிய அளவில் மிக அதிகமான, பலதரப்பட்ட உலோகச் சுரங்கங்களைக் கண்டு பிடித்திருப்பதையும் குறிப்பிடுவேன். இவை எல்லாம் தெரிந்த விஷயங்கள்

தான். தங்களுடைய மிருகத்தனமான சுயநலத்திலும், மனிதத்தன்மை இல்லாத வர்க்க எண்ணங்களினாலும் குருடாகிப் போனவர்கள் தான், மனமும் அறிவுத்திறமும் அடைந்த இவ் வெற்றிகளைக் காணத் தவறிவிடுகிறார்கள். கண்ணிருந்தும் காண மனம் இல்லாதிருப்பவர்களும், உண்மையைக் காணக் கூடாது என்று தங்கள் எஜமானர்களால் தடுக்கப் பெற்றுள்ள பத்திரிகைக்காரர்களும் தான் இவற்றைப் பார்க்கத் தவறி விடுகிறார்கள்.

சோவியத் யூனியனில் ஒரே ஒரு எஜமான் தான் உண்டு. இது தான் அதனுடைய மூலாதாரமான சாதனையாகும். முதலாளித்துவ நாடுகளிலிருந்து அதை வேறாக எடுத்துக் காட்டுவதும் இதுவே யாகும். லெனினின் மாணவர்களது இயக்கத்தினால் வழிகாட்டப் படுகின்ற தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோரது அரசாங்கம் தான் இந்த எஜமானன். அது தனக்காக அமைத்துக் கொண்டுள்ள நோக்கம் மிகவும் தெளிவானது;— பல இனங்களைச் சேர்ந்த பதினாறுகோடி மக்களில் ஒவ்வொரு தனி நபருக்கும் அவரவர் திறமைகளையும் விசேஷ ஆற்றலையும் தாராளமாக வளர்ப்பதற்கு ஏற்ற நிலைமைகளைச் சிருஷ்டிப்பது. வேறு விதமாகச் சொல்வதானால், சாத்தியமான, ஆயினும் செயலற்று இருக்கிற, மூளை, நரம்பு நாளங்களின் சக்தியனைத்தையும் செயல் முறையாக மாற்றுவதும், அதன் ஆக்கல் பண்புகளைக் கிளர்ச்சியுறச் செய்வதுமே ஆகும். இது அனுபவ சாத்தியம் தானா?

நடைமுறையில் இது சாதிக்கப்படுகிறது! கலாசாரத்தின் சகல பாதைகளும் அவர்களுக்கு முன்னால் திறந்து விடப்பட்டிருப்பதால், கலை, விஞ்ஞானம், தொழில் நுணுக்க இயல், ராஜ்ய நிர்வாகம் முதலிய எல்லாத் துறைகளிலும் சக்தியைப் பிரயோகித்துப் பணி புரியும் பல்லாயிரக் கணக்கான திறமையுள்ள இளைஞர்களை மக்கள் சிருஷ்டித்துத் தருகிறார்கள்.

எங்கள் வாழ்க்கையிலும் வேலையிலும் நாங்கள் தவறுகள் செய்யாமல் இல்லை. ஆனால் முதலாளித்துவ சுபாவங்களை — வாழையடி வாழையாக வந்திருக்கிற மூடத்தனம், சோம்பேறித்தனம், மற்றுமுள்ள துன்மார்க்கங்களை — பத்து அல்லது பதினைந்து வருடங்களுக்குள் அகற்றிவிட முடியாது. இருப்பினும், சர்வ வியாபகமான மனித கலாசாரத்தின் மறுக்க முடியாத சாதனைகளை, இளந் தொழிலாளிகள் ஐரோப்பாவை விட அதி விரைவாக அடைந்து வருகின்றனர். ஆட்சேபத்துக்கு இடமில்லாத இவ் உண்மையை ஒரு பைத்தியக்காரனோ, கோபத்தினால் உன்மத்தமாகி விட்டவனோ தான் மறுக்கத் துணிவான்.

பழங் கலாசாரத்தில் மறுக்க முடியாத விதத்தில் மதிப்புப் பெற்றுள்ளவைகளின் அஸ்திவாரத்தின் மீது நின்று கொண்டு, சோவியத் மக்கள் தங்களுடைய தேசீய— ஆனாலும், உலக ரீதியில் மனிதத்துவமான — பண்புகளை துணிகரமாக விருத்தி செய்து வருகிறார்கள். சோவியத் யூனியனில் உள்ள தேசீயச் சிறுபான்மையினரின் புதிய இலக்கியம், இசை, ஆகியவற்றைக் காணத் தயாராக இருக்கிற எவரும் இதைப் பற்றிய உண்மையை உணர்ந்து தம்மைத் தாமே திருப்தி செய்து கொள்ளலாம்.

துருக்கிய இனத்திலும், துருக்கிய பின்னிஷ் இனத்திலும் நிகழ்ந்துள்ள பெண்கள் விடுதலையையும், வாழ்க்கையின் புது அமைப்புகளில் அவர்கள் கொண்டுள்ள பேரவா, அவர்களுடைய முயற்சி ஆகியவற்றையும் குறிப்பிடத்தான் வேண்டும்.

சோவியத் யூனியனில் சட்டங்கள் செய்
தொழிலாளி மக்களுக்கிடையே, அவர்
புரியும் அனுபவம், தொழில் நிலைமை
மாறுதல்கள் ஆகியவற்றை ஆத
பிறந்து வளர்கிறது. 'மக்கள் பிரதிநி

தலைமை ஸ்தாபனம் இந்த அனுபவத்தைச் சட்டங்களாக அமைப்பதில் மட்டுமே கவனம் செலுத்துகிறது. தொழிலாளி மக்களின் நலனைக் கருத்தில் நிறுத்தித்தான் அதையும் செய்ய முடியும். ஏனெனில், நாட்டில் வேறொரு எஜமானன் கிடையாது அல்லவா?

உலகம் முழுவதிலும் சட்டங்கள் மேலிடத்திலிருந்து ஆலங்கட்டிகள் போல் 'தபதப வென்று' உதிர்கின்றன. அவை அனைத்துக்கும் இரண்டு நோக்கங்களே உண்டு; 1. தொழிலாளி மக்களின் உழைப்புச் சக்தியைத் தங்கள் நலத்துக்குப் பயன் படுத்துவது. 2. உடல் ஆற்றலை அறிவாற்றலாக மாற்றும் செயல்களுக்குத் தடைகள் விதிப்பது. பரஸ்பரம் கொள்ளையடிப்பதற்குத் துணைபுரியும் யுத்த தளவாடங்களுக்கு முதலாளிகள் செலவிடுகிற திரவிய சாதனங்கள் பொதுஜனக் கல்வி அபிவிருத்திக்காகச் செலவு செய்யப்படுமானால், முதலாளித்துவ உலகத்தின் பயங்கரமான தோற்றம் இப்பொழுது உள்ளது போல் அவ்வளவு வெறுப்புத்தருவதாக இல்லாமல் இருக்கலாம். சோவியத் யூனியன் மீது முதலாளித்துவத்திற்கு உள்ள வெறுப்பின் காரணமாக சோவியத் நாடு தனது காலத்தையும், உலோகப் பொருள்களையும் யுத்த தளவாடங்கள் தயாரிப்பதில் வீணுக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. ஐரோப்பிய முதலாளிகள் தங்களுடைய தொழிலாளிகளுக்கும், விவசாயிகளுக்கும் எதிராக இழைக்கின்ற மற்றுமொரு குற்றமாகத்தான் இதைக் கருத வேண்டும்.

தொழிலாளி மக்களின் கலாசாரக் கோரிக்கைகளையும் தேவைகளையும் திருப்தி செய்யும் நோக்கம் பெற்றிராத கட்டளை எதுவும் மக்கள் சபையால் நிறைவேற்றப்பட்டுள்ளது என்று ஒருவரும் சுட்டிக்காட்ட முடியாது. லெனின்கிராட் நகரம் புதுப்பித்துச் சீர்செய்யப்படுகிறது.

அது சம்பந்தமான மகாநாடுகளில் டாக்டர்கள், கலைஞர் கள், நர்சுகள், கட்டிட வேலை நிபுணர்கள், எழுத்தாளர் கள் எல்லோரும் கலந்து கொள்கிறார்கள். தொழிற்சாலை களிலிருந்து வந்துள்ள பிரதிநிதிகளான தொழிலாளர் களும் அவற்றில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள் என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை. நான் அறிந்த வரையில் ஐரோப்பாவில் இந்த வழக்கம் கிடையவே கிடையாது.

சோவியத் யூனியனில் உள்ள பத்திரிகைகள், நடை முறையில் உள்ள எல்லாத் தவறுகளையும், வாழ்க்கையின் பழைய போக்கில் காணப்படும் சகல விதமான பாபங்களை யும் மூடத்தனங்களையும் ஒளிவு மறைவு இல்லாமல் எடுத்துக் காட்டுகின்றன. (இந்தப் பண்பு அளவுக்கு அதிகமாகவும் தீமை புரிவதாகவும் கூட விளங்குகின்றது என்பது என் அபிப்பிராயம். ஏனெனில், பண்பாடற்ற பாமர மனிதரின் உள்ளத்தில், நிறைவேற முடியாத நம்பிக்கைகளை இது எழுப்பி விடுகிறது.) முதலாளித் துவப் பத்திரிகைகள் செய்யத் துணியாத ஒரு காரியம் ஆகும் இது. கொலைகளைப் பற்றி விரிவான ருசிகரமான வர்ணனைகளையோ, சாமர்த்தியமான எத்து வேலைகள் பற்றிய வசீகரமான கதைகளையோ பிரசுரித்து, கல்வி அறி வில்லாத சாதாரண வாசகனின் உள்ளத்தைச் சீரழிய வைப்பதையே பெரிதும் விரும்புகின்றன முதலாளித்துவப் பத்திரிகைகள்.

இந்தப் பதினைந்து வருட காலத்தில், தொழிலாளி—விவசாயி மக்கள் தங்கள் மத்தியிலிருந்து புதுமை புனைப வர்களை ஆயிரக் கணக்கில் தோற்றுவித்திருக்கிறார்கள். மேலும் தோற்றுவித்து வருகிறார்கள். இந்தப் புதுமைச் சிற்பிகள் கோடி கோடியாகப் பணத்தை மிச்சப்படுத்தும் பணியில் சோவியத் யூனியனுக்கு மிகுதியும் துணைபுரிந்து

வருகிறார்கள். வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து தான் தீர வேண்டும் என்ற நிலையிலிருந்து நாட்டு மக்களை இவர்கள் படிப்படியாக விடுவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

தொழிலாளி, தானே தொழிலின் அதிபதி என்ற உணர்வு பெற்று விட்டதால், நாட்டுக்குத் தான் கடமைப் பட்டவன் எனும் பொறுப்பு உணர்ச்சியையும் இயல்பாகவே அடைந்து வருகிறான். தயாரிக்கப்படும் சாமான்களின் தரத்தை உயர்த்தவும், அவற்றின் உற்பத்திச் செலவைக் குறைக்கவும் பாடுபடும்படி அவனைத் தூண்டுகிறது இந்த உணர்ச்சி.

புரட்சிக்கு முந்திய விவசாயி பதினேழாம் நூற்றாண்டில் இருந்தவை போன்ற நிலைமைகளுக்கு இடையேதான் உழைத்து வந்தான். அவன் இயற்கையின் அருளை முற்றிலும் நம்பி வாழ வேண்டியிருந்தது. அவனுடைய நிலமோ வளம் குன்றிய சிறு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுக் கிடந்தது. இப்பொழுது, அவனுக்கு டிராக்டர்கள், பண் படுத்துவது, விதைப்பது முதலான அலுவல்களைச் செய்யும் இயந்திரங்கள் எல்லாம் தாமதமின்றிக் கிடைத்து விடுகின்றன. ரசாயன உரங்களை அவன் தாராளமாக உபயோகிக்கிறான். இருபத்தாறு விவசாய ஆராய்ச்சிப் பண்ணைகள் அவனுக்காக உழைத்துக் கொண்டிருக்கின்றன. விஞ்ஞானம் பற்றி எதுவுமே தெரியாமலிருந்தவன் அவன். இப்பொழுதோ, விஞ்ஞானத்தின் சக்தி பற்றியும் மனித அறிவின் ஆற்றல் பற்றியும் சித்திர விவரணைகளோடு நன்கறிந்து அவன் திருப்திகொள்ள முடிகிறது.

தொழில் நுணுக்கக் கலையின் முற்போக்கான நவீன சாதனைகளைப் பயன் படுத்தி நிர்மாணிக்கப் பட்டுள்ள ஒரு தொழிற்சாலைக்கு வந்து சேருகிறான் பட்டிக்காட்டு

வாலிபன் ஒருவன். அவனது கற்பனையைக் கிளறி, உள்ளத்தில் விழிப்பு ஏற்படுத்தி. அங்கு உறைகின்ற காட்டுத் தனமான பூர்வீக மூட நம்பிக்கைகளையும் தப்பெண்ணங்களையும் களைந்தெறியக் கூடிய விளைவுகள் நிறைந்த விசேஷ உலகத்தில் தான் இருப்பதாக அவன் உணருகிறான். மிகுதியும் சிக்கல்கள் நிறைந்த இயந்திரங்கள், அவை சம்பந்தப்பட்ட இயந்திரக் கருவிகள், ஆகியவற்றில் பரிணமித்து விளங்குகின்ற அறிவின் வேலைப்பாடுகளை அவன் பார்க்கிறான். அனுபவம் இல்லாத காரணத்தால் அவன் எதையாவது பழுதாக்கி விடுவான் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும், பொருள்களுக்கு அவன் விளைவிக்கிற கேட்டுக்கு ஈடு செய்து விடுகிறது அவனுடைய அறிவில் ஏற்படும் வளர்ச்சி. அந்தத் தொழிற்சாலையின் எஜமானர்கள் தன்னை ஒத்த தொழிலாளிகளே என்பதையும், அங்குள்ள இளம் இன்ஜினீயர் ஒரு தொழிலாளி அல்லது விவசாயியின் மகன்தான் என்பதையும் அவன்காண்கிறான். அவனது விசேஷத் திறமைகள் யாவும் தாராளமாக வளர்ந்து பிரகாசிப்பதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கும் பள்ளிக்கூடம் தான் அந்தத் தொழிற்சாலை என்கிற நம்பிக்கை அவனுக்கு வெகு சீக்கிரத்திலேயே உண்டாகி விடுகிறது. அவன் விசேஷமான திறமை பெற்றிருந்தால், தகுந்த உயர்நிலைக் கல்வி ஸ்தாபனங்களுக்கு அவனை அத்தொழிற்சாலை அனுப்பி வைக்கும். ஆனால், இதற்குள்ளாகவே அநேகம் தொழிற்சாலைகள் தங்களுக்கென்று சொந்தமாகவே தொழிற் கலைக் கல்வி நிலையங்களை அமைத்துக்கொண்டு விட்டன. உலகத்தின் அற்புதங்களை எல்லாம் ஆராய்ந்து அறிந்து கொள்ளும் ஆற்றலை உள்ளடக்கிய அவனது மூளை, நரம்பு நாளங்களின் சக்தி இப்பொழுது வலிமையுடன் இயங்குகின்றது. இந்தச் சூழ்நிலை அவன் தந்தைக்கு இல்லவே இல்லை!

ஐரோப்பாவிலேயே மிகவும் நேர்த்தியானவை என்று அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட நாடகசாலைகளுக்கு அவன் செல்ல முடிகிறது. முதல் தரமான ஐரோப்பிய—பழைய ரஷ்ய இலக்கியங்களை அவன் வாசிக்கிறான். இசை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறான். கண்காட்சிச் சாலைகளுக்குப் போகிறான். அவனுக்கு முன்னிருந்தவர்களில் எவருமே படித்திராத வகையில் அவன் தன் நாட்டைப்பற்றி நன்கு கற்றறிகிறான்.

சிறிது காலத்துக்கு முன்பு, நாடு முழுவதிலும் உலோக தாதுக்களையும், உலோக மல்லாத பொருள்களையும் கொண்டுள்ள சுரங்கங்களைத் தேடிப் பார்க்கும் முயற்சியில் கலந்து கொள்ளும்படி, தோழர் கூயிபிஷெவ்† கம்யூனிஸ்டு இளைஞர்களை அழைத்தார். இதன் அர்த்தம் என்ன? சோவியத் யூனியனின் மிகமிகக் கீர்த்தி பெற்ற பூதத்துவ நிபுணர்களின் மேற்பார்வையில் பல்லாயிரக் கணக்கான வாலிபர்கள் தொழில் புரிந்து, பக்குவப்படுத்தப் பெறாத தாதுப் பொருள்கள் நிறைந்த புதிய புதிய சுரங்கங்களைக் கண்டுபிடிப்பதன் மூலம் நாட்டின் பொருளாதாரத்தை வளம்படுத்துவார்கள்; அத்துடன் தாங்களும் புது அறிவும் அனுபவமும் பெறுவார்கள். இத்தகைய காரியங்களுக்காக இப்பேர்ப்பட்ட படைகளைத் திரட்டி ஸ்தாபன ரீதியில் உழைக்கச் செய்வது முதலாளித்துவ நாடுகளின் ஆற்றலுக்கு அப்பாற்பட்ட விஷயமாகும். இன்னும் சொல்லப் போனால், அந்நாடுகளில் தேடிக் கண்டுபிடிப்பதற்கு எதுவுமே கிடையாது. ஏனெனில், அகப்படக் கூடியவற்றை எல்லாம் முதலாளி வர்க்கத்தினரின் ஒழுங்கற்ற ஆட்சிமுறை அடியோடு

† வி. வி. கூயிபிஷெவ் (1888—1935) = சோவியத் கம்யூனிஸ்டு கட்சி அங்கத்தினராகச் சிறந்து விளங்கியவர். புகழ் வாய்ந்த ராஜ தந்திரி. சோவியத் கம்யூனிஸ்டு கட்சியின் பொலிட் பீரோவின் மெம்பராகவும், ராஜ்ய திட்டக் கமிஷனின் தலைவர் ஆகவும் பணிபுரிந்திருக்கிறார்.

கொள்ளையிட்டுச் சூறையாடி விட்டது! ஐரோப்பிய ரத்தக்காட்டேறிகள் மற்றுமொரு தடவை சோவியத் யூனியன் மீது படையெடுத்துக் கொள்ளையிட முயற்சி செய்வார்களானால், அவர்களுடைய இராணுவத்தினர் திறமையான வீரர்களை எதிர்த்துச் சமாளிக்க வேண்டியிருப்பதையும், அப்படி எதிர்த்து நிற்கும் வீரர்களில் ஒவ்வொருவரும் தாம் எவற்றைப் பாதுகாக்கப் போரிடுகிறோம் என்பதைத் திடமாக உணர்ந்தவர்கள் என்பதையும் கண்டு கொள்வார்கள்.

* * *

மக்களின் முட்டாள்தனத்தை நம்பித்தான் முதலாளி வர்க்கத்தினர் தங்களுடைய வஞ்சகத் திட்டங்களைப் போடுகிறார்கள். ஆனால், சோவியத் யூனியனிலோ உழைப்பாளி மக்களுக்கு, அபிவிருத்தி பெறுகிற அமைப்பு முறையின்படி கல்வி அறிவு புகட்டப்படுகிறது. அவர்களுடைய ஆளும் உரிமை பற்றிய அறிவை அவர்கள் பெற்று விட்டார்கள். சோவியத் யூனியனில் புதிய மனிதன் தோன்றி வளருகிறான். அவனுடைய குணங்களைப் பற்றித் துல்லியமாக இப்பொழுதே வரையறுத்துச் சொல்லி விடலாம்.

அறிவின் ஆக்குதற் திறமையில் அவன் நம்பிக்கை பெற்றிருக்கிறான். இந்த நம்பிக்கையை ஐரோப்பாவில் உள்ள அறிவாளிகள் இழந்து விட்டார்கள். வர்க்க விரோதங்களை சமாதானப்படுத்தித் தீர்த்து வைக்கும் பயனற்ற முயற்சிகளில் ஈடுபட்டு அவர்கள் ஓய்ந்து போனதுதான் அதற்குக் காரணம் ஆகும்.

'புதியதோர் உலகம் செய்யும் பிரம்மா நானேதான்!' என்று புதிய மனிதன் உணர்கிறான். அவனுடைய வாழ்க்கை நிலைமைகள் இப்பொழுதும் கடுமையானவையாகவே இருந்த போதிலும், அவற்றிலிருந்து மாறுபட்ட

நிலைமைகளைச் சிருஷ்டிப்பது தான் தன்னுடைய லட்சியம் என்றும், அது தன்னுடைய அறிவின் பலத்தைப் பொறுத்த விஷயம் என்றும், அவன் அறிந்திருக்கிறான். ஆகையினால், அவன் நம்பிக்கை வறட்சியும் இருள் நோக்கும் பெற்றவனாக (பெஸிமிஸ்ட் ஆக) மாறுவதற்குக் காரணம் எதுவும் இல்லை. வயதில் மட்டுமல்லாமல், சரித்திர ரீதியிலும் அவன் இளைஞனே யாவன். வரலாற்றிலே தன்னுடைய வழியையும் முக்கியத்துவத்தையும் பற்றிய உண்மையை இப்பொழுதுதான் புரிந்து கொண்ட ஓர் சக்தி அவன். இப்பொழுதான் செயல்படத் துவங்கி, சுலபமான, தெளிவு நிறைந்த ஒரு கோட்பாட்டினால் வழிகாட்டப் படுகின்ற, வாலிப சக்தியின் பூரணத் துணிச்சலோடும் அவன் கலாசார அபிவிருத்திக்கான தனது வேலையைச் செய்து வருகிறான். தொழிற்கலை விஞ்ஞானத்தினால் கலவரம் அடைந்துள்ள †ஸ்பெங்கிளர்களின் புலம்பல்களையும் ஊளைகளையும் கேட்பது வேடிக்கையாகப்படுகிறது அவனுக்கு. ஏனென்றால், உடல் உழைப்பின் அடிமைகளாய் உழல்கின்ற லட்சோப லட்சம் மக்களின் கலாசார அபிவிருத்திக்காக அத் தொழிற்கலை விஞ்ஞானம் இன்னும் எதுவும் சாதித்துவிட வில்லை என்பதை அவன் வெகு நன்றாக அறிகிறான். முதலாளி வர்க்கம் தனி மனித சக்தியில் நம்பிக்கை வைத்து வெட்கமுறத் தக்க வகையில் தோல்வி அடைந்து விட்டது; தனிமனித வளர்ச்சிக்கு ஆதரவாக உண்மையில் அது எதுவுமே செய்யவில்லை; ஆனால் மனிதரில் பெரும் பான்மையோர் மீது அராஜக ஆதிக்கம் செலுத்தி, தனது ஆதிக்கம் 'நித்தியமான உண்மை' என்று மறைமுகமாகவோ அல்லது பகிரங்கமாகவோ பிரகடனம் செய்து, அதன் மூலம் தனிமனி வளர்ச்சியைச் சுய நலத்தோடு ஒடுக்கி விட்டது. இவை அனைத்தையும் புதிய மனிதன்

† ஸ்பெங்கிளர் (Spengler) = 'ஐரோப்பாவின் வீழ்ச்சி', 'மனிதனும் தொழில் நுணுக்கமும்,' ஆகிய நூல்களை எழுதிய ஜெர்மானிய இருள் நோக்கு வாதி.

பார்க்கிறான். முதலாளி வர்க்கத்தின் மிருகத்தனமான தனிமனித வாதத்தை மறுக்கிற புதிய மனிதன், கூட்டுத் திட்டத்தில் கலந்து கொள்கிற தனி மனிதன் எவ்வளவு உயரிய முக்கியமான அங்கமாக விளங்குகிறான் என்பதை, பூரணமாக அறிந்திருக்கிறான். ஏனெனில், அவனே அவ் விதமான ஒரு தனி மனிதனாக—மக்களிடமிருந்தும், அவர் களுடைய தொழில் முறைகளிலிருந்தும் ஆற்றலையும் ஆர்வத்தையும் தாராளமாகப் பெற்றுக்கொள்கிறவனாக—இருக்கிறான். முதலாளித்துவம் மனித ஜாதியை அராஜகத் தில் கொண்டு விட்டிருக்கிறது; அராஜகம் மிகப் பெரிய அபாயத்தைக் காட்டி மனிதனை அச்சுறுத்துகிறது—உண்மையான மனிதன் ஒவ்வொருவனுக்கும் தெளிவாக விளங்கும் விஷயம் இது.

உடல் வலிமையாலும், ஆன்மாவை அடிமைப்படுத்து வதாலும், யுத்தகளங்களில் நிகழும் போர்கள்– நகரத்தின் வீதிகளில் நிகழும் படுகொலைகள் மூலமும், பழமையான - அடியோடு அழுகிப் போய்விட்ட - மனிதத்தன்மை இல்லாத "அமைப்பை" - எதனுடைய தயவு இல்லாமல் முதலாளி வர்க்கம் உயிர்வாழ முடியாதோ அந்தச் சுரண்டல் அமைப்பை – மீண்டும் நிலைநிறுத்துவது தான் பழைய உலகத்தின் நோக்கம் ஆகும்.

புராதனமான மூடநம்பிக்கைகள், இனம், தேசம் வர்க்கம், மதம் ஆகியவற்றினால் ஏற்பட்ட தப்பெண்ணங் கள் முதலியவற்றிலிருந்து உழைப்பாளி மக்களை விடுவிப்பது; ஒவ்வொருவரும் தமது திறமைக்குத்தகுந்தபடி உழைத்து, தேவைகளுக்குத் தகுந்த அளவு ஊதியம் பெறுவதற்கு வகைசெய்யும் உலக சகோதரத்துவ சமுதாயத்தை அமைப்பது - இது தான் புதிய மனிதனின் நோக்கம். (1932)

# பாட்டாளி வர்க்க மனிதத்துவம்

"உலகம் நோய் வாய்ப்பட்டிருக்கிறது."—இப்படி போல்ஷ்விக்குகள் மட்டுமே சொல்லவில்லை. கவிதை உள்ளம் பெற்ற மனிதாபிமானிகளும் இதனை அழுத்த மாகக் கூறுகிறார்கள். பிற உயிர்களைக் கொன்று வாழ் கின்ற இரண்டு கால் மிருகங்கள் தங்களுடைய ஓநாய்த் தனமான 'இயல்பை' மூடி மறைப்பதற்காகப் பிரசாரம் செய்து வந்த 'அன்பு, கருணை, பெருந்தன்மை' முதலிய பல உணர்ச்சிகளும் செயல் முறைக்குப் பயன்பட மாட்டா; அவற்றை வாணிபப் பொருளாக மாற்றுவதும் சாத்திய மில்லை; அவற்றை விலைக்கு வாங்கக் கூடியவர்களும் அகப் படுவதில்லை; வர்த்தகம் — தொழில் சம்பந்தமான லாபங் களுக்கு அவை தீமையே விளைவிக்கின்றன என்பதை அவர்கள் ஒருவாறு உணர்ந்து விட்டார்கள்.

"உலகத்துக்குப் பைத்தியம் பிடித்து விட்டது"— தொழில் உலகத்தின் மீது முதலாளி வர்க்கம் செலுத்து கின்ற பொறுப்பற்ற, மனிதத் தன்மை இல்லாத, ஆட்சி யையும், தொழிலாளர்களின் உழைப்புச் சக்தியை எஜ மானர்கள் சுயலாபத்துக்காகப் பயன்படுத்திக்கொள்ளும் கட்டுப்பாடற்ற, அர்த்தமற்ற செயலையும், நியாயமானது

என்று நிருபித்துப் பாதுகாப்பதையே தங்கள் பிழைப் பாகக் கொண்டு விட்டவர்கள் முன்னை விட அதிகமான சப்தமிட்டு இதைக் கூவுகிறார்கள்.

முதலாளித்துவத்தின் 'நோய்', பலவீனமுற்றிருந்த நிலப் பிரபுக்களிடமிருந்து முதலாளிகள் அதிகாரத்தைப் பலவந்தமாகப் பறித்துக் கொண்ட உடனேயே ஆரம்ப மாகி விட்டது. இந்த வியாதியை முதன் முதலாகக் கவனித்து, அதைப்பற்றி நிராசையோடு மூர்க்கமாகக் குரல் எழுப்பியவர் கார்ல் மார்க்ஸ் காலத்தில் வாழ்ந்த, பிரீட்ரிக் நீட்ஷேதான் என்று கொள்ளலாம். தற்செயலானது என்று எதுவுமே கிடையாது. வாழ்க்கையில் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒரு காரணம் உண்டு. முதலாளித்துவத்தின் வீழ்ச்சியும் தொழிலாளரின் ஆட்சியும் தவிர்க்க முடியாவை என்பதை விஞ்ஞான பூர்வமாகவும் மறுத்துரைக்க முடியாத வகையிலும் மார்க்ஸ் மெய்ப்பித்துக் கொண் டிருந்த காலத்திலேயே, 'சுந்தரமான மிருக'த்தின் கட்டுப் பாடற்ற ஆட்சியின் தர்ம நியாயம் பற்றி, பயம் கொண்டு விட்ட—உன்மத்தனின் கோபாவேசத்தோடு நீட்ஷே உபதேசம் பண்ணிக்கொண்டிருந்தார். நீட்ஷேக்கு முன்பு, முதலாளிகளின் அரசாங்கம், மதம், நன்னெறிகள் பற்றி எல்லாம் மாக்ஸ் ஸ்டர்னர் என்பவர் எதிர்வாதம் செய்து கொண்டிருந்தார். தனி மனிதனின் வரைமுறையற்ற அகங் கார உரிமையை அவர் வற்புறுத்தி வந்தார். அராஜக மான இந்தக் குற்றச் சாட்டு சாராம்சத்தில் 'மனிதத்து வத்தை' வெளிப்படையாகக் கண்டிப்பதே ஆகும். அதை முதலாளித்துவம், மத்திய காலத்திலேயே—நிலப் பிரபுத்துவத்தையும் நிலப் பிரபுக்களின் லட்சியக் கோட்பாட்டுக்குத் தலைமை தாங்கும் (திருச்சபை) மத பீடத்தையும் எதிர்த்துப் போரிடத் துவங்கிய பொழுதே— தோற்றுவித்தது. மனிதத்துவத்தின் அசௌகரியத்தையும்

தன்மயமான முரண்பாடுகளையும், முதலாளித்துவம் தனது நடைமுறை அனுபவத்தினுல் வெகு முன்னதாகவே உணர்ந்திருந்தது. லூதர், கால்வின் முதலியோர் செய்த மதச் சீர்திருத்தம் இதையே எடுத்துச் சொல்கிறது. உண்மையில் அந்தச் சீர்திருத்தம் 'மனிதாபிமான' கிறிஸ்துவ வேதங்களுக்கு (Gospels) பதிலாக விவிலியத்தை (Bible)ப் புகுத்தும் முயற்சியாகத்தான் முடிந்தது. அதுவோ வருண விரோதம், கொலை, கொள்ளை, ஏமாற்று முதலியவைகளை—எவை இல்லாமல் முதலாளித்துவ அரசாங்கம் நிலைத்திருக்க முடியாதோ அவற்றை எல்லாம் –முற்றிலும் இயல்பானவை என்று மாத்திரம் கருதவில்லை; போற்றத் தக்கனவாகவும் மதிக்கிறது. லூதருக்கு முற்காலத்தில் கிறிஸ்துவுக்காகக் கஷ்டங்களைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளும்படி கலாசாரத் துறையில் உழைப்பவர்களை மத பீடம் கெஞ்சிக் கேட்டது. லூதர், பாதிரிகளுக்கு மாருன சுபாவத்தோடு, மிகவும் நேரடியாகப் போதித்தார். பதிஞறும் நூற்ருண்டில், விவசாயிகளும் கைத்தொழிலாளிகளும் கிளர்ச்சி செய்து கொண்டு போராடத் துவங்கியபோது, "மன்னர்களும் பிரபுக்களும் உங்களை சுலபமாக ஆட்சி புரிவதற்குத் துணை செய்யும் வகையில் வாழ்ந்து, உழைப்பீர்களாக. பொறுமையோடு இருங்கள். இணங்கிப் போங்கள். உடலையும் சொத்தையும் அவர்களிடம் ஒப்படையுங்கள். உங்களைவிட மேற்பட்டவர்களையும், கொடுங்கோலர்களையும் எதிர்த்துக் கிளம்பாதிர்கள்!" என்று அவர் போதித்தார்.

நம் காலத்தில் முதலாளித்துவ 'மனிதத்துவம்' பற்றிய பொய்மையையும் வஞ்சனையையும் நிரூபித்துக் காட்டுவதற்கு அவசியம் எதுவுமில்லை. ஏனெனில், இப்பொழுது முதலாளிகளாகிய மாமிசபட்சணிகள் தமது கோரப் பற்களை மூடி மறைப்பதற்கு வழியில்லை. சீர்கெட்டுப்போன

முக மூடியைக் களைந் தெறிவது போல, தங்களுடைய மனிதத்துவத்தை விட்டெறிந்து விட்டு, பாசிசத்தை வளர்ப்பதில், அவர்கள் சிரத்தை காட்டுகிறார்கள். தங்களுடைய சுயரூபம் அம்பலமாவதற்கும், சீரழிவுக்கும் ஏதுவான காரணங்களில் மனிதத்துவமும் ஒன்றாகும் என அவர்கள் உணர நேரிட்டதனாலேயே, முதலாளிகள் அதை வெறுத்து ஒதுக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

உணர்ச்சி மிக்க மனிதர்கள், உலகத்தின் பாதகச் செயல்களைக் கண்டு மனம் குமம்பி, அக் கொடுமைகளைக் குறைப்பதற்காகவோ அல்லது சொல்வன்மை எனும் திரையிட்டு மூடி மறைக்கும் நோக்கத்துடனோ, கபடமில்லாமல் முயற்சி செய்து மனிதாபிமானம்பற்றி உபதேசிக்கக் கிளம்புகிறார்கள், உலகம் பூராவும் பரவியுள்ள வியாபாரிகளின் 'கலாசார' நடவடிக்கைகளின் தவிர்க்க முடியாத விளைவுகளாக விளங்குகின்ற வறுமை, கொடுங்கோன்மை, அடக்கு முறை முதலான பலவற்றினாலும் ஆத்திரம் அடைகிற மக்களை அமைதிப்படுத்தும் ஒரு முயற்சி என்ற முறையில் தான், வாழ்வின் எஜமானர்களாகிய வியாபாரிகள் இத்தகைய போதனைகளை எல்லாம் அனுமதிப்பார்கள். ஆனால், தொழிலாளி மக்களின் கோபம் பொங்கி சமுதாயப் புரட்சியாக உருவெடுத்த உடனேயே, முதலாளிகள் 'எதிர்தாக்குதல்' மூலம் பதிலுக்குப்பதில் நடவடிக்கை எடுத்து விடுவார்கள்.

நமது தாராள மனோபாவம் பெற்ற முதலாளிகள் இந்த விதிக்கு மனப்பூர்வமாகக் கட்டுப்பட்டார்கள். 1905—06ம் ஆண்டு நிகழ்ச்சிகளுக்குப் பிறகு அவர்கள் மனம் நைந்து, அனுதாபத்தை அறிவிக்கும் 'வீக்கி' (vekhi) எனும் புத்தகத்தில் இவ்வாறு பகிரங்கமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்: "மக்களின் கோபாவேசத்திலிருந்து தங்கள் பயனட்டுகள் மூலம் நம்மைப் பாதுகாத்ததற்காக நாம்

அரசாங்கத்துக்கு நன்றி உடையவர்களாக இருக்க வேண்டும்''. அந்தச் சந்தர்ப்பத்தில் அரசாங்கம் ஸ்டோலி பின் என்ற மந்திரியின் கைப்பிடியில் சிக்கியிருந்தது. அவன் சர்வாதிகாரமாக, ஐயாயிரத்துக்கும் அதிகமான தொழி லாளிகளையும் விவசாயிகளையும் தூக்கிலிட்டான்.

நம் காலத்தில், சரித்திர ரீதியில் விஞ்ஞான பூர்வ மாகவும் அமைந்துள்ள – உண்மையாகவே உலக மனித நலத்தை நோக்கமாக உடைய – மார்க்ஸ், லெனின் ஸ்டாலின் ஸ்தாபித்த பாட்டாளி வர்க்க மனிதத்துவத்தின் பயங்கரமான எதிர்ப்பு அரசாங்கங்களுக்கு ஏற்பட் டுள்ளது. சகல நாடுகளிலும் உள்ள எல்லா இனங்களையும் சேர்ந்த தொழிலாளி மக்களை முதலாளி வர்க்கத்தின் இரும்புப்பிடியிலிருந்து விடுவித்து அவர்களுக்குப் பரிபூரண மான சுதந்திரம் அளிப்பது தான் பாட்டாளி வர்க்க மனிதத்துவத்தின் நோக்கமாகும். முதலாளி வர்க்கத்தின் இரும்புப் பிடியைத் தொழிலாளிகள் தாம் உருவாக்கு கிறார்கள்; முதலாளி வர்க்கத்தினரின் 'அழகான வாழ்க்கை'யை அமைத்துக் கொடுப்பவர்கள் பாட்டாளி மக்கள் தான்; ஆனால் அதே சமயத்தில் அவர்கள் அடிமை களாய், தரித்திரராய் அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இவ்விஷயத்தை, மனித அன்பை அடிப்படையாகக் கொண்ட இந்த உண்மையான கோட்பாடு எவரும் மறுத் துரைக்க முடியாத வகையில் நிரூபித்து விட்டது.

முதலாளி வர்க்கத்தை எதிர்த்து இரக்கமற்ற போராட்டம் நிகழ்த்துவதற்குச் சரித்திர பூர்வமாக நியாய மான உரிமையையும், முதலாளித்துவ உலகத்தின் சண்டாளத்தனமான சகல அஸ்திவாரங்களையும் தகர்த்து நொறுக்கி அழித்து விடும் உரிமையையும், புரட்சிகரமான இந்த மனிதத்துவம் பாட்டாளி மக்களுக்கு அளிக்கிறது. மனித ஜாதியின் வரலாற்றிலேயே முதல் முறையாக,

உண்மையான மனித அன்பு ஒரு சிருஷ்டி சக்தியாக ஸ்தாபன வடிவம் பெறுகிறது. சிறுபான்மையினரின் மனிதத்தன்மையற்ற, அற்பத்தனமான ஆதிக்கத்திலிருந்து கோடானுகோடி உழைப்பாளி மக்களை விடுவிப்பதைத் தனது நோக்கமாகக் கொண்டுவிட்டது அது. உடல் உழைப்பினுல் வாழ்கின்ற கோடானுகோடி மக்களிடம் அது கூறுகிறது: 'கலாசாரத்தின் பொக்கிஷங்களை எல்லாம் உருவாக்குவது உங்களுடைய உழைப்பேயாகும்; அப் பொக்கிஷங்கள் அனைத்தையும் பயன்படுத்தி உலகம் முழு மைக்கும் பொதுவான புதிய சோஷலிஸ கலாசாரத்தைப் பாட்டாளி மக்கள் சிருஷ்டிக்க வேண்டும்; அது தான் உலகத்தில் உள்ள தொழிலாளி மக்களுக்கிடையே சகோதரத்துவத்தையும் சமத்துவத்தையும் நிலைநாட்டும்.'

பாட்டாளி வர்க்க மனிதத்துவம் என்பது பகற்கனவு அல்ல; வெறும் கொள்கையும் அல்ல. அது சோஷலிஸ சோவியத் யூனியனில் உள்ள பாட்டாளி வர்க்கத்தினரால் உருக்குப் போன்ற உறுதியோடு, துணிகரமாயும் வீரத் தன்மையோடும் அனுஷ்டிக்கப்பட்டு வருவது. முன்பு முதலாளிகளையும் விவசாயிகளையும், 'காட்டுமிராண்டிகளை யும்' கொண்டிருந்த ரஷ்யாவில் – எண்ணற்ற தேசீய, இனப்பகுதிகள் மிகுந்திருந்த ரஷ்யாவில் – இப்பொழுது சகோதரத்துவமும் சர்வ தேசிய சமத்துவமும் உண்மை யாகவே ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. இது நிரூபிக்கப்பட்ட விஷயமாகும். ஏராளமான மக்களின் உடல் சக்தியை, அறிவின் ஆற்றலாக மாற்றும் முயற்சி உண்மையாகவே ரஷ்யாவில் பெருகி வருகிறது. இதை யாரும் மறுக்க முடியாது.

தொழிலாளி வர்க்கத்தின் புரட்சி உணர்வு வளர் வதைத் தடுக்கும் நோக்கத்தோடு எல்லா நாடுகளிலும் உள்ள முதலாளிகள் என்ன செய்கிருர்கள்?

கோடானுகோடி உழைப்பாளி மக்கள் கொண்டுள்ள ஆதிக்கத்தை நிரந்தரமாக நிலை நிறுத்தவும், உழைப்பை அர்த்தமற்ற முறையில் சுய லாபத்துக்காகப் பயன் படுத்தும் தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாக்கவும், தங்கள் சக்தி அனைத்தையும் செலவிட்டுப் பாடுபடுகிற முதலாளிகள் பாசிசத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். பலவீனப்படுத்தப்பட்ட முதலாளித்துவ சமுதாயத்தில், உடல் நிலையிலும் ஒழுக்க முறையிலும் சீர்கெட்ட பகுதியினரை எல்லாம் ஒன்று சேர்ப்பதும் படை திரட்டுவதும் தான் பாசிசம் ஆகும். குடிகாரர்கள், மேகநோய் பற்றியவர்கள் ஆகியோரின் இளம் சந்ததிகளையும், 1914-18ம் ஆண்டு யுத்தத்தின் நினைவுகளால் சித்தம் குலைந்த பிள்ளைகளையும், நடுத்தர வர்க்கத்தினர் மக்களையும், தோல்வியடைந்தவர்களையும் சேர்த்துப் படை திரட்டுகிற முயற்சிதான் பாசிசம். இவ் இளைஞர்களின் மனப் பண்பை பின் வருவன போன்ற நிகழ்சிகள் நன்கு எடுத்துக் காட்டும்: "இவ் வருஷம் மே மாத ஆரம்பத்தில், ஜெர்மனியில் உள்ள எஸ்ஸன் நகரத்தைச் சேர்ந்த **ஹீன்ஸ்** எனும் பதினைன்கு வயதுச் சிறுவன் தனது நண்பனை பிரிட்ஸ் **வாக்கன்ஹோர்ஸ்ட்** என்கிற பதின்மூன்று வயதுப் பையனைக் கொன்று விட்டான். அவன் முன்னேற்பாடாக நண்பனுக்காக ஒரு சவக்குழி தோண்டி வைத்திருந்ததாகவும், பிறகு அவனை உயிரோடு அதில் பிடித்துத் தள்ளியதாகவும், அவன் மூச்சு முட்டிச் செத்துத் போகிற வரையில் அவனுடைய முகத்தை மணலோடு சேர்த்து அழுத்தியதாகவும் அந்தக் கொலைகாரன் அமைதியோடு விவரித்தான். ஹிட்லரின் அதிர்ச்சிப் படைக்கு உரிய ராணுவ உடுப்பு வாக்கன்ஹோர்ஸ்டிடம் இருந்தது; அதைக் கைப்பற்றிக் கொள்ள ஆசைப்பட்டுத்தான் அவனைக் கொல்ல நேரிட்டது என்றும் அவன் அறிவித்தான்."

பாசிஸ்டு ராணுவ அணி வகுப்புகளைப் பார்த்திருக்கிற எவரும், அவை கீல்வாதம், சொறி சிரங்கு. க்ஷய ரோகம் ஆகியவற்ருல் பீடிக்கப்பெற்ற சிறுவர்களின் அணிவகுப்புத் தான் என்பதை அறிந்து கொள்வார்கள். வியாதி பற்றியவர்களுக்கே உரிய உணர்ச்சி வெறியோடு வாழ ஆசைப்படுகிறவர்கள் அவர்கள்; விஷம் கலந்து விட்ட தங்கள் ரத்தத் துடிப்புக்கு ஒரு போக்கு அளிக்கவல்ல சுதந்திரத்தை அவர்களுக்கு அனுமதிக்கிற எதையும் ஏற்றுக் கொள்ளக் கூடியவர்கள் அவர்கள். ரத்தம் குன்றிப்போன, சாம்பல் நிறமான, ஆயிரம் ஆயிரம் முகங்களினூடே ஆரோக்கியமும் மலர்ச்சியும் நிறைந்த முகங்கள் தனித்து எடுப்பாக விளங்குகின்றன. அவை மிகவும் குறைவாக இருப்பதே அதற்குக் காரணமாகும். ஆமாம். பாட்டாளி வர்க்கத்தின் உணர்வு பூர்வமான எதிரிகள், நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த வீரச் செயல் வாதிகள், முன்னுள் சோஷியல் டெமாக்கிரட்டுகள், அல்லது பெரிய வியாபாரிகளாக வளர ஆசைப்படுகிற சில்லறை வியாபாரிகள் ஆகியோருடைய முகங்கள் தான் அவை. வியாபாரிகளுக்குக் கொஞ்சம் எரி பொருளேயோ, அல்லது உருளைக் கிழங்குகளையோ லஞ்சமாகக் கொடுத்து அவர்களுடைய வாக்குச் சீட்டுகளை ஜெர்மானிய பாசிஸ்டு தலைவர்கள் விலைக்கு வாங்கி விட்டார்கள், தொழிலாளர்களைச் சுரண்டி வஞ்சித்துத் தான் அவர்கள் அதிகாரத்துக்கு வந்தார்கள் என்பதும் முக்கியமாகும். தலைமைப் பணியாளர்கள் தங்களுக்கென்று சொந்தமாகச் சிறு உணவு விடுதிகள் நடத்த ஆசைப் படுகிருர்கள். சில்லறைத் திருடர்களோ, அதிகார வர்க்கத்தினர் எவ்வளவுக்கு அனுமதிக்கிருர்களோ அவ்வளவு பெரிய கொள்ளைகளில் ஈடுபட விரும்புவார்கள்—இந்த ரகங்களிலிருந்து தான் தனக்குத் தேவையான 'ஊழியர்களைப்'

பாசிசம் தேர்ந்து எடுக்கிறது. ஒரே சமயத்தில் முதலாளித்துவத்தின் பலமாகவும், பலவீனமாகவும் விளங்குவது தான் பாசிஸ்டு ராணுவ அணிவகுப்பு ஆகும்.

நாம் நமது கண்களை மூடிக்கொள்ள வேண்டாம். பாசிஸ்டுகளுக்கிடையே காணப்படுகிற தொழிலாளிகளின் எண்ணிக்கை அற்ற சொற்பமானதல்ல; புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தின் உறுதியான பலத்தை இன்னும் உணர்ந்து கொள்ளாத தொழிலாளிகள் பாஸிஸ்டுகளிடையே இருக்கிருர்கள். உலகத்தின் புல்லுருவியான முதலாளித்துவம் இன்னும் வலிமை மிகுந்ததாகவே இருக்கிறது; ஏனென்ருல் தொழிலாளர்களும் விவசாயிகளும் தங்களுடைய ஆயுதங்களையும், உணவையும் அதன் கையிலேயே ஒப்படைத்துக் கொண்டிருக்கிருர்கள்; தங்களுடைய சதையையும் ரத்தத்தையும் ஊட்டி அதைக் கொழுக்கச் செய்யும் வேலையில் தொடர்ந்து ஈடுபட்டிருக்கிருர்கள். இந்த உண்மையை நம்மிடமிருந்து நாமே மூடி மறைக்க வேண்டியதில்லை. கொந்தளிப்பான இக்காலத்தில் மிகுந்த பரிதாபத்துக்கும் வெட்கத்துக்கும் உரிய விஷயம் இது தான். தனது விரோதிக்கு ஆக்கம் கொடுத்து வரும் தொழிலாளி வர்க்கத்தின் இந்தத் தாழ்மை எவ்வளவு அருவருக்கத் தகுந்ததாக இருக்கிறது! இந்தத் தாழ்மை உணர்ச்சியை ஊட்டியவர்கள் சோஷியல் டெமாக்கிரட்டிக் தலைவர்கள் தான். அவர்களுடைய பெயர்களின் மீது இன்றும் என்றும் அழியாத விதத்தில் அவமானத்தின் மஞ்சள் நிறமான எண்ணெய்ப் பிசுக்குப் படிந்து விட்டது. வேலையில்லாத் திண்டாட்டம் பரவி வருகிற காலத்தில், கூலி விகிதம் குறைவுபட்டு வரும் பொழுது, நடுத்தர வர்க்கத்தினரின் வாங்கும் சக்தி கூட தளர்ச்சி அடைந்து வருகிற சமயத்தில், சந்தை விலை விகிதாசாரத்தை குறிப்பிட்ட ஒரு நிலையில் நிறுத்தி வைக்க

வேண்டும் என்பதற்காக உணவுப் பொருள்கள் அழிக்கப் படுகின்றன. இத்தகைய நிகழ்ச்சிகளை வேலையில்லாதவர் களும் பட்டினியால் கஷ்டப்படுகிறவர்களும் சகித்துக் கொண்டிருக்கிறார்களே, அவர்களுடைய பொறுமை எவ்வளவு விநோதமானது!

தங்களுடைய வேலையில்லாச் சகோதரர்களுக்கு இழைப்படும், பின்வருவது போன்ற ஈவு இரக்கமில்லாக் கொடுமைகளைக்கண்டு, பிரிட்டிஷ் பாட்டாளி வர்க்கத்தின் தன்மானம் குமுறி எழுந்து கனல் கக்கும் என்று நாம் கருதலாம்;—

“இங்கிலாந்தில் உள்ள ஸர்ரே நகரத்தில் நாய்களுக்கு என்று ஒரு ஆப்பக்கடை திறக்கப்பட்டுள்ளது, இப்படி ஒரு கடையை ஆரம்பித்திருப்பது இதுதான் முதல் தடவை யாகும். இந்தக் கடை சகல விதமான நாய்களுக்கும் தேவையான அப்பங்களை விற்பனை செய்கிறது; தங்கும் இடமின்றியும் பட்டினியாலும் தவிக்கிற நாய்களுக்கு உணவும் இடமும் அளிக்கிறது. பிராக்ஹர்ஸ்ட் நகரில் சில வாரங்களுக்கு முன்பு மரணமடைந்த மிஸ்டர் ஜேம்ஸ் பேட்டர்சன் இதற்கென்றே எழுதி வைத்த பணத்தைக் கொண்டு தான் இந்தக் கடை ஆரம்பிக்கபட்டிருக்கிறது.”

வெட்கக்கேடான இத்தகைய கொடிய ஊதாரிச் செயல்கள், ‘பணக்கார இனம்’ பெருத்த தேசமான இங்கிலாந்தில் வரவர மிகவும் அதிகமாகிக் கொண்டிக் கின்றன. தங்களுடைய வீழ்ச்சி தவிர்க்க முடியாதது என்பதைப் ‘பேட்டர்சன்கள்’ உணர்ந்து விட்டார்கள் என்று வெளிப்படையாகக் காட்டும் செயல்களாக அவை இருக்கக் கூடும். வாழ்விலிருந்து பிரிந்து செல்லும் பொழுது தங்களால் சாத்தியமான அளவு அற்பச் செயல்களைச் செய்து பழிதீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற பண மமதையான தூண்டுதல் பேட்டர்சன்களுக்கு ஏற்படும்

என்பதைச் சுட்டிக்காட்டுவனவாகவும் அவை விளங்குதல் கூடும்.

முதிரா இளைஞர்களுக்கும் வாலிபர்களுக்கும், ரிவால்வர்களோடு கூட, வழக்கிழந்து விட்ட தேசிய – ஜாதீயக் கருத்துக்களையும் அளித்து அவர்களை யுத்தத்திற்குத் தயார் படுத்துவதன் மூலம் – சமூக மானிடத்துவேஷத்தையும், கொலை கொள்ளை முதலியவற்றின் மீது துன்புறுத்தி இன்பம் காணும் துராசையையும் இளைஞர்களின் உள்ளத்தில் விதைப்பதன் மூலமும் – புரட்சிகரமான பாட்டாளி மக்களுக்கு எதிராக நிகழும் சண்டையில் போலீசாருக்குத் துணைபுரியக் கூடியவர்களாக முதலாளிகள் அவர்களை இயக்குவிக்கிறார்கள். அது மட்டுமல்ல. மனிதர்களைக் கொன்றுகுவிக்கும் நாகரிகமான இயந்திர ஆயுதங்களைப் பெற்றுள்ள தொழிலாளர் விவசாயிகள் படைகளின் ரத்தத்தில் கலந்துவிடும்படி உட்செலுத்துவதற்கு உரிய ஒரு விஷமாகவும் முதலாளிகள் அவர்களை மாற்றி வருகிறார்கள். 1918 - 20 – ல் மிருகத்தனமான "பாசறைப் பயிற்சித்தளத்தினரால் பயிற்றுவிக்கப்பட்ட தொழிலாளர்களும் விவசாயிகளும், தங்களுடைய வர்க்க விரோதிகளுக்குப் பக்கபலமாக அர்த்தமற்ற முறையிலும் தற்கொலைத்தனமாகவும் இயந்திர ரீதியிலும் தாங்கள் பணியாற்றுவதிலே கூட ஒரு வரைமுறை உண்டு என்பதையும் – அந்த எல்லை கடந்ததும் (கோடிக் கணக்கான தொழிலாளர்களும் விவசாயிகளும் தங்களைத் தாங்களே கொன்றும் படுகாயப்படுத்தியும் குவித்ததற்குப் பிறகு) பயனட்டுகளும் துப்பாக்கிகளும் முதலாளித்துவத்தின் நலன்களுக்காகப் பாடுபட மறுத்துவிடும் என்பதையும் — எடுத்துக்காட்டியதை முதலாளிகள் நன்றாக நினைவில் வைத்திருக்கிறார்கள். "ஒரு போதும் செய்யாமல் இருப்பதை விட, காலம் தாழ்ந்து செய்வது மேலானது" என்பதில்

சந்தேகமில்லை. ஆனால் இந்த விஷயத்தில் வர்க்க விரோதிகளிடமிருந்து ஒரு பாடம் படித்துக் கொள்வது நல்லது: தொழிலாளி, தனக்கு எதிராக நியாய பூர்வமாகக் கிளம்புவதற்கு முன்னதாகவே முதலாளி தொழிலாளியை ஒழித்துக் கட்டி விடுகிறான்.

ஐரோப்பிய இளைஞர்கள் மீது பாசிசம் கொண்டுள்ள நாசகார ஆதிக்கத்தைப் பற்றிக் கூறும் நிகழ்ச்சிகள் நூற்றுக் கணக்கிலே உள்ளன. அத்தகைய விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டுமென்றாலே நமது வயிற்றைக் குமட்டுகிறது. அது மட்டுமல்ல. அதிகரிக்கும் ஆர்வத்தோடு அளவுக்கு அதிகமாகவே முதலாளிகள் உண்டாக்குகிற அசுத்தங்களால் நிரம்பிவழிய நமது ஞாபகசக்தி மறுத்து விடுகிறது. ஆயினும் நான் ஒன்று சொல்வேன்—பாட்டாளி வர்க்கம் துணிவோடும் வெற்றிகரமாக ஆட்சி நடத்தி வருகிற நாட்டிலே, இளைஞர்களை நாசப்படுத்தும் களங்கமான ஒரு பால் புணர்ச்சி (homosexualism) சட்டரீதியில் தண்டனைக்கு உரிய சமுதாயக் குற்றமாகக் கருதப்படுகிறது. ஆனால், பெரிய பெரிய தத்துவ ஞானிகளும் விஞ்ஞானிகளும், இசை வல்லுநர்களும் வாழ்கிற 'கலாசார' நாட்டிலோ அது தாராளமாகவும், தீங்கு எனக் கருதப்படாத முறையிலும் அனுஷ்டிக்கப்படுகிறது. "ஒரு பால் புணர்ச்சியை அழியுங்கள்; பாசிசம் தானாகவே மறைந்து விடும்" என்ற ஏளன வாக்கியம் இதற்குள்ளாகவே புனையப் பட்டுவிட்டது. யூத இனத்தினர் – அவசியம் ஏற்பட்டால் தங்களுடைய புனிதத்தன்மை பற்றிப் பெருமை பேசிக்கொள்ளக் கூடிய மனிதப்பிரிவைச் சேர்ந்த மக்கள் – மனித ஜாதிக்கு உண்மையாகவே மிக உயர்ந்த கலாசாரத் தலைவர்களை (அவர்கள் எல்லோரிலும் மகா மேதையான, பாட்டாளி வர்க்கத்தின் உண்மையான ஞானதூதுவர் ஆன கார்ல் மார்க்ஸை) — உலகத்துக்கு

அளித்துள்ள மக்கள், ஜெர்மனிய பாஸிஸ்டு முதலாளிகளால் நாட்டை விட்டு வெளியே துரத்தப்படுகிருர்கள். அதே சமயத்தில் பிரிட்டனில் உள்ள பாசிஸ்டுகளும் (அந்நாட்டின் ஆட்சி நிர்வாகத்தில் பொறுப்பான பங்கு ஏற்றுக் கொண்ட யூதர்களின் எண்ணிக்கையும், நாட்டின் உயர் குலத்தார் வரிசையில் இடம் பெற்று விட்டவர்களின் தொகையும் குறைவானது அல்ல.) யூதர்களை எதிர்க்கும் வெட்கக்கேடான கோட்பாட்டை உபதேசிக்கத் தொடங்கியிருக்கிருர்கள்.

ஆனல், தொழிலாளி வர்க்கத்தினரிடம் அதிகாரம் இருக்கிற நாட்டிலோ, தனியாக யூதர்களின் குடியரசு ஒன்று – யூத சுயாட்சி மாகாணம் ஒன்று - அமைக்கப் பட்டுள்ளது.

பல நாடுகளிலும் உள்ள முதலாளிகள் மற்றுமொரு உலக யுத்தத்திற்காக ஜன்னி வேகத்தில் ஆயத்தம் செய்து கொண்டிருக்கிருர்கள். தொழிலாளிகள் விவசாயிகள் ஆகியோரது உழைப்பை இன்னும் அதிகமாகவும் சுரண்டி சுய லாபம் பெறுவதற்குத் துணையாக உலகத்தை மறுபடியும் பங்கு போட வேண்டும் என்ற ஆவல் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, பெரிய நாடுகளின் இரும்புப் பிடியில் சிக்கிக் கொள்ளக் கூடிய ஆபத்து சிறிய நாடுகளுக்கு மீண்டும் தோன்றியுள்ளது. தங்கள் கலாசாரத்தை தாராளமாக அபிவிருத்தி செய்யும் உரிமைமை இழந்து விட நேரலாம் என்ற பயம் அவற்றுக்கு மீண்டும் ஏற்பட்டிருக்கிறது.

ஏகாதிபத்தியமும், பாசிசமும் பல்வேறு மொழிகளையும் இனங்களையும் சேர்ந்த பாட்டாளி மக்களிடையே தேசியச் சண்டை, ஜாதி அகந்தை, வெறுப்பு ஆகியவற்றின் நச்சு விதைகளை விதைத்து வருகின்றன. நாளடைவில் இவை

இனவெறியாக வளர்ச்சியடைந்து, தங்கள் வர்க்க நலன்களின் ஒருமைப் பாட்டை உணர்த்தும் பண்பு—(உன்மத்த முற்ற முதலாளிகளின் கீழ் பாதுகாப்பின்றி நசுக்கப்படுகிற அடிமைகளாக வாழும் நிலையிலிருந்து தொழிலாளர்களையும் விவசாயிகளையும் விடுதலை அடையும்படி காப்பாற்றக் கூடிய இந்த உணர்வு)—தொழிலாளர் உலகத்தில் வளர்வதைத் தடுத்துவிடக் கூடும். அவர்களுடைய தேசிய, வர்த்தக, தொழில் முறை விரோதம், இனவிரோதத்தையும் இனயுத்தத்தையும் தூண்டும் வகையில் பிரசாரம் செய்யும்படி அவர்களுக்குச் சுலபமாக வழிகாட்டலாம்; ஏற்கனவே வழிக்காட்டிக் கொண்டும் இருக்கிறது. இன்று அவர்கள் யூத எதிர்ப்பை உபதேசித்து வருகிறார்கள்; இழிவான முறையில் அதைக் கையாண்டும் வருகிறார்கள். நாளை அவர்கள் ஸ்லாவ் இன எதிர்ப்புப் பற்றி உபதேசிக்கக் கிளம்பிவிடலாம். அதற்காக அவர்கள், ஸ்லாவ் இனத்தினரைப் பற்றி, 'மாம்சென்'னும் 'ட்ரீட்ஷ்கி'யும் பிறரும் கொண்டுள்ள வெட்ககரமான அபிப்பிராயங்களை ஞாபகப் படுத்திக் கொள்வார்கள்; ஜெர்மன் கலாசாரத்தை வளம் படுத்த போலந்துக் காரர்களிலும், போமார்களிலும், ஸெக்கு இனத்தைச் சேர்ந்தவர்களிலும் எவ்வளவோ திறமையாளர்கள் தோன்றியிருப்பதை மறந்துவிடுவார்கள். ஐரோப்பாவின் சகல தொழிற்சாலை முதலாளிகளும் ஒரே ரகமான சரக்குகளையே தயாரித்து வியாபாரம் செய்வதால் ரோமானிய இனத்துக்கு எதிராக—ஆங்கிலோ சாக்ஸன் இனத்துக்கு எதிராகக் கூட—பகைமையும் யுத்தங்களும் ஏற்படுவது இயல்பே யாகும். அவர்களுக்குள் கூட்டு ஒப்பந்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால், லாபம் அடிக்க வேண்டும் என்றால் ஏன் வஞ்சிக்கக் கூடாது? உதாரணமாக, பிரிட்டன் ஜப்பானுடன் உறவு கொண்டிருக்கிறது. ஆயினும், ஜப்பானியர் ஒரு ஜோடி மூன்று பென்ஸ் என்ற விகிதத்தில் சில்க்

ஸ்டாக்கிங்குகளை லண்டனில் விற்பனை செய்கிறார்கள். பார்க்கப்போனால், இது சின்ன விஷயம் தான். எனினும், விலைமலியும்படி சரக்குகளை ஜப்பானியர் 'கொண்டு வந்து குவிப்பது' ஒன்றே, மஞ்சள் இனத்துக்கு எதிராக (ஜப்பானியருக்கு எதிராக) விரோதமும் வெறுப்பும் வளருவதற்குப் போதுமான காரணமாகும். ஜப்பானிய ஏகாதிபத்திய வாதிகள் மஞ்சூரியாவிலும் சீனாவிலும் கேட்பாரற்றுச் செய்துகொண்டிருக்கிற காரியம் ஐரோப்பிய ஏகாதிபத்திய வாதிகளுக்கும் ஆசையைத் தூண்டுவதாக உள்ளது.

இனக் கொள்கை தான், செத்துக்கொண்டிருக்கிற முதலாளித்துவ கோட்பாட்டின் கடைசி ஆயுதம் ஆகும். அதன் அழுகல் நாற்றம் நல்லவர்களைக் கூட கெடுத்து விடும் சக்தி பெற்றது. ஏனெனில், மிகுதியும் ஆயுத பலம் பொருந்திய வெள்ளையர்கள், ஆயுதம் எதுவு மற்ற இந்தியர்களையும், சீனர்களையும், நீக்கிரோக்களையும் கேட்பாரற்று நெடுங்காலமாக அடிமைப்படுத்திக் கொண்டிருப்பதைப் பார்த்துப் பொதுவாகவே மக்கள் நேர்மையை மறந்திருக்கிறார்கள்.

ஐக்கிய முன்னணியாக ஒன்று திரண்ட புரட்சிகரமான பாட்டாளி வர்க்கம் மட்டுமே, தனது வர்க்க சகோதரர்கள் சண்டாளத்தனமாகக் கொள்ளையிடப்படுவதைப் பார்த்துக்கொண்டிருக்கும் நச்சு உள்ளங்களை எதிர்க்கும் ஆற்றல் உடையது.

இந்தப் பாட்டாளி வர்க்கம் (மார்க்ஸிஸ லெனினிஸ சித்தாந்தத்தில் ஸ்டாலின் தலைமையில் செயல் முறையில் பயிற்சி பெற்றுள்ள வர்க்கம்) வேறுபட்ட பல தேசிய இனங்களைக் கொண்ட தனது நாட்டிலே வசிக்கிற எல்லா வகுப்பினரும், இனத்தினரும் வாழ்வு, உழைப்பு தங்கள் கலாசார அபிவிருத்தி ஆகிய உரிமைகளின்படி பரிபூரண சமத்துவம் பெற்றவர்களே என்பதை உலகிற்கு எடுத்துக்

காட்டி விட்டது. முன்பு தமக்கென அரிச்சுவடி பெறாமலும், கல்வி அறிவு இல்லாமலும் அரை குறைக் காட்டுமிராண்டிகளாக இருந்த மக்களுக்கு அறிவின் பாதையை அகலத் திறந்து வழி காட்டியவன் ரஷ்யத் தொழிலாளிதான்.

சோவியத் யூனியனில் வாழ்கிறவர்களின் கலாசார வளர்ச்சி வேகம், சகல நாடுகளிலும் உள்ள நேர்மையான ஆண் பெண் அனைவராலும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இந்த உண்மையை ஒப்புக்கொண்டதும், நேர்மையான ஆண் பெண் அனைவரும் அதிலிருந்து மிகவும் எளிமையான, ஒழுக்க நெறியின்படியும் சரியான ஒரு முடிவை கிரகித்துக் கொள்வார்கள் என்றுதான் யாரும் எண்ணக் கூடும். சமூக நோய்களினால் சாகக்கூடிய வகையில் தாக்கப்பட்டு, அழிவு நிச்சயம் என்ற நிலையில் இருக்கிற ஒரு சூழலில் வாழ்வதை விட, ஆரோக்கியமான தொரு சூழலில் வாழ்வது, அக நோக்கிலும் புறநோக்கிலும், எவ்வளவோ பயனுள்ளது, எவ்வளவோ யோக்கியமானது என்பதுதான் அந்த முடிவு ஆகும். பாட்டாளி வர்க்கம் புதிய சமுதாயத்தைச் சிருஷ்டிக்கும் சக்தி பெற்றிருக்கிறது என்பதை ஒப்புக்கொண்டதும், அதனுடைய அறிவுத் தாகத்தின் அபிவிருத்திக்கும், அதன் திறமைகளின் வளர்ச்சிக்கும், அதனுடைய சரித்திர பூர்வமான புனிதப் பணி பற்றி (இந்தப் பணி 17 கோடி மக்கள் வசிக்கும் ஒரு நாட்டில் ஏற்கனவே தொடங்கி விட்டது!) உழைப்பாளி மக்களிடம் உணர்வு பெருகுவதற்கும் வசதியாக, எல்லாவிதமான ஆதரவுகளையும் நாம் பாட்டாளி வர்க்கத்திற்கு அளிப்பதுதான் மிகுதியும் பயனுடையதாகும். கலாசாரத்தை முதலாளிகள் மறுத்து வருகிற செயலினாலும், மனிதப் பிறவிகளை அடியோடு அழிக்கும் நோக்கத்தோடு ஏற்படுத்தப்பட்ட ராணுவ நூல் தவிர்ந்த இதர கலாசாஸ்திரங்களின் முன்னேற்றத்தை எதிர்க்கும் அவர்களுடைய படை எழுச்சியாலும்,

கலா விற்பன்னர்கள், மனித நலம் கோருவோர் ஆகியோரின் தன் மானம் பங்கப் படுத்தப் பட்டிருக்கும் என்று தான் எவரும் கருதுவர். பாசிசம் அங்கீகாரம் செய்யாத புத்தகங்களைத் தீயிட்டுப் பொசுக்குவது, தேசிய – இனக் கொள்கைகளில் தொக்கி நிற்கிற வெறுப்பை உபதேசிப்பது – மிகவும் ஆரோக்கியமாக வாழும் தனி நபர்களை அர்த்தமற்ற முறையில் ஒழித்துக் கட்டுவதற்காகவும்; யுகம் யுகமாக வளர்ந்து வரும் கலாசாரப் பொக்கிஷங்களை நெருப்பு மூலம் மீண்டும் அழிப்பதற்காகவும்; நகரங்களைத் தகர்த்துத் தரைமட்ட மாக்குவதற்காகவும்; யந்திரசாலைகளையும் தொழிற்சாலைகளையும் கட்டியும், வயல்களை உழுது பயிரிட்டும், பாலங்களையும் ரஸ்தாக்களையும் அமைத்தும் வாழ்கிற மக்களின் சிரம உழைப்பின் விளைவுகளை நாசப் படுத்துவதற்காகவும் — மற்றுமோர் புதிய உக்கிரமான யுத்தத்திற்கு ஏற்பாடுகள் செய்வது ஆகிய நிகழ்ச்சிகளினால் முதலாளித்துவ கலாசாரத்தை ஆதரிக்கும் பெரிய மனிதர்கள் ஆங்காரம் அடைந்திருப்பதாகத் தெரியவில்லை. கொள்ளைக்காரர்களின் வெறி, வெறும் சொல்வன்மையுடைய அறிவுரைகளால் தீர்ந்துவிடக் கூடியது அல்ல; புலிகளும் கழுதைப் புலிகளும் ரொட்டி தின்றால், அவற்றின் பசி தீருமா?

முதலாளித்துவ "மனிதாபிமானிகள்" மனிதவர்க்கத்திடம் உண்மையான அன்பு செலுத்தக் கூடியவர்கள் தான் என்பது இன்று புலனாகவில்லை. நமது யுகத்தின் மகோன்னதமான வீரநாடகத்தைப் பற்றி அவர்கள் உணர்ந்திருக்கிறார்களா? இல்லை. இந்த யுகத்தின் வீரர்கள் யார் என்பதையாவது அவர்கள் அறிந்து கொண்டிருக்கிறார்களா என்றால், அப்படியும் தோன்றவில்லை. பித்தமும், ஜுரவேகமும் பெற்றுள்ள முதலாளிகள் ஆகிய எறும்புப் புற்று மீது, புரட்சிகரமான பாட்டாளி வர்க்கம் யானை

மாதிரி அடி எடுத்து வைத்து அதை மண்ணோடு மண்ணாக நசுக்குவதற்குரிய காலம் வந்து கொண்டிருக்கிறது. இது தவிர்க்க முடியாதது ஆகும். அற்பமான சிறுபான்மை இனம் எதுவோ சிருஷ்டிக்கும் ஆற்றலை இழந்து தளர்ந்து போய்விட்டது – வாழ்கை பற்றிய தனது பயத்தினாலும், செல்வத்தின் மீது கொண்டுள்ள வளர்ந்து வரும் பேராசையினாலும் துராசையினாலும் அது சீரழிந்து சிதைந்து வருகிறது–என்பதற்காக மனிதவர்க்கம் தனது அழிவைத் தானே பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியாது. இந்தச் சிறுபான்மை இனத்தின் அழிவு தான் மிகவும் உயர்ந்த நியாயமான செயலாகும். இந்தச் செயலை நிறைவேற்றும் படி சரித்திரம் பாட்டாளி வர்க்கத்துக்கு ஆணையிட்டுக் கொண்டிருக்கிறது. இந்த மகத்தான செயலுக்குப் பிறகு உலக மக்கள் அனைவரும் புதுவாழ்வு எனும் சிறப்பான சுதந்திர அமைப்பை உருவாக்க, சர்வதேச ஒற்றுமையோடும் சகோதரத்துவத்துடனும், உழைப்பார்கள்.

இது வெறும் நம்பிக்கை தானா? பாட்டாளி வர்க்கத்தைப் பொறுத்த மட்டில், நம்பிக்கையும் அறிவும், பொய்யும் உண்மையும் போல ஒன்றுக்கு ஒன்று நேர்மாறானவை என்றிருந்த காலம் போய் மறைந்தது. பாட்டாளிவர்க்கம் ஆட்சி புரிகிற இடத்தில், அறிவுக்கும் நம்பிக்கைக்குமிடையே பேதம் விளைவதற்கு இடமே கிடையாது. அங்கே தனது சிந்தனையின் வலிமையை உணர்ந்த மனித ஞானத்தின் விளைவே நம்பிக்கை ஆகும். இந்த நம்பிக்கை வீரர்களைச் சிருஷ்டிக்கிறது; கடவுளர்களைப் படைக்கவில்லை – இனி படைக்கப் போவது -மில்லை! (1934)

# ஜோனெஸ் பீச்சரின் வழக்கு விசாரணை

இந்தக் காலத்தில் திறமைசாலிகள் மிகவும் குறைவாகத் தான் இருக்கிறார்கள். இருபதாம் நூற்றாண்டு மிகுந்த கருமித்தனமாகத் தான் அவர்களைச் சிருஷ்டிக்கிறது. ஜோனெஸ் பீச்சர் ஒரு திறமைசாலி என்பது மற்ற எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயமாகும். அவருடைய கவிதையின் அழகையும் வலிமையையும் பற்றி நான் தீர்ப்புக் கூற முடியாதுதான். ஆயினும், அது அவருடைய வசனத்தை விட எந்த விதத்திலும் குறைந்தது இல்லை என்பது நிச்சயம். அவருடைய 'லீவிசைட்' ('ஒரே ஒரு நியாய யுத்தம்') அழகான புத்தகம் ஆகும். அன்பினு லும் வெறுப்பினுலும் உந்தப்பட்ட ஒரு கவிஞனின் சிருஷ்டி அது.

ஜோனெஸ் பீச்சர் தண்டனையை எதிர் நோக்கி நிற்கிருர். ஏனெனில் அவர் ஆர்வத்தோடு அன்பு செலுத்து கிருர்; உக்கிரமாக வெறுப்புக் காட்டுகிருர்.

கிறிஸ்துவை வழிபடுகிறவர்களால் அவர் விசாரிக்கப் படுவார். கிறிஸ்து, அன்பு காட்டியதற்காகவும் வெறுப்புக் கொண்டதற்காகவும் கொல்லப்பட்டார்.

கிறிஸ்துவச் சீமானர்களே! – சந்தேகம் வேண்டாம். நான் ஒரு நாஸ்திகன் தான் – இந்த இடத்தில் ஒரு சிறு முரண்பாடு இருப்பதாக என் கருத்தில் படுகிறது. ஆனால், உங்களைப் பொறுத்த வரையில் முரண்பாடுகள் மிகவும் பழக்கமாகிவிட்டன. அதனால் அவற்றைப் பற்றி நீங்கள் விசேஷமான கவனம் செலுத்தாமல் இருந்து விடுவதும் சாத்தியமே. பீச்சரை நீங்கள் விசாரணை செய்யும் போது, உண்மையை நேர்மையாகவும் பயமின்றியும் திறமை யோடும் உங்களுக்கு எடுத்துச் சொல்லக் கூடிய துணிச்சல் பெற்ற மனிதன் ஒருவனைப் பழிவாங்க வேண்டும் என்கிற உங்கள் சொந்த உணர்ச்சியினால் நீங்கள் ஆட்டிவைக்கப் படுவீர்கள்.

ஐரோப்பிய முதலாளி வர்க்கம் அதனுடைய பழி பாவங்களினால் ஒரு சிறிது கூடச் சோர்ந்து போவதில்லை என்பதை நான் அறிவேன். பிரான்சின் யுத்தங்களில் கோடிக்கணக்கான உயிர்களை அது பலியிட்ட பிறகு, அதை ஏதாவது தடுத்து நிறுத்திவிட முடியுமா என்ன?

தொழிலாளி வர்க்கத்தின் நேர்த்தியான ஜீவன்கள் விஷக்காற்றினால் எவ்வாறு உயிரோடு எரிக்கப்பட்டன என்பதையும், யுத்தத்தின் மூலம் கொள்ளை லாபம் அடிக் கிற ராப்கீ போன்ற யுத்தத்தின் மூலம் கொள்ளை லாபம் அடிக்கிற சுயநலமிகளும் மற்றுமுள்ள அரக்கர்களும் பூமிக்குப் பாரமாக உயிர்வாழ வேண்டும் எனும் ஒரே காரணத்திற்காகத் தான் அவ்வாறு செயல் புரிந்தார்கள் என்பதையும், 'லீவிசைட்' என்கிற புத்தகத்தில் உள்ளத்தைக் கவ்வும் உணர்ச்சியோடு பீச்சர் விவரித்திருக் கிறார். நான்கு வருட காலம் நடைபெற்ற மிகமிகக்

கொடுமையான யுத்தத்தின் விளைவு என்னவென்றால், வெற்றி பெற்றுள்ளவர்களில் சிலர் இன்னும் பற்பல ஆண்டுகள் வரை தலையெடுக்க முடியாதவாறு ஏழ்மைப் படுகுழியில் ஆழ்த்தப் பட்டுவிட்டார்கள்; தோல்வி யுற்றவர்களோ கடைசித் தும்புதூசி வரை சுரண்டப் பட்டு விட்டார்கள். வெற்றி பெற்றுள்ள ஒரே ஒரு இனம் மூன்றும் கட்சியேயாகும். அதுவோ கர்வத்தினால் முன்னைப் பார்க்கிலும் அதிகமான மடத்தனத்தில் வளர்ச்சி பெற்று வருகிறது. ஏனெனில், மற்றெவரையும் விட மிகுந்த புத்தி சாலியும் பலசாலியும் தானே தான் என்று அது நம்பிக் கொண்டிருக்கிறது. சென்று போனதை விட மிகுதியும் அர்த்தமற்றதாயும், முட்டாள் தனமானதாகவும் விளங்கக் கூடிய மற்றுமொரு புதிய ‘அக்கினிக் குண்டத்துக்காக’ ( யுத்தத்திற்காக ) எல்லோருமே மறைமுகமாகவோ பகிரங்கமாகவோ உழைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

"கலாசார அபிவிருத்திக்கு யுத்தம் இன்றியமையாத ஒரு அம்சமாகும். அது தான் கலாசார வளர்ச்சி பெற்ற நாடுகளின் மகோன்னத சக்தியும், அவற்றின் ஆண்மையை வெளிப்படையாக எடுத்துக் காட்டும் காட்சியும் ஆகும்."– ‘லிவிசைட்’ எனும் புத்தகத்தில் வருகிற ‘வீரர்’களில் ஒருவனான பிராட்ஸ் என்பவன். முற்றிவிட்ட ஜனத் துவேஷப் பண்போடு இவ்விதம் குறிப்பிடுகிறான்.

உண்மையிலேயே அவன் ஒரு அரக்கன் தான். அவனுக்கு உரிய இடம் ஜெயிலிலே யாகும். இத்தகைய மனிதர்கள் தான் விசாரணைக்குக் கொண்டுவரப்பட வேண்டியவர்கள்.

ஜோனெஸ் பீச்சருக்கு மரண தண்டனை விதிக்கப் படுமானால், பிராட்ஸின் இனத்தைச் சேர்ந்த போக்கிரி களையும், அடாத வகையில் தலையெடுக்கத் துணிந்தவர்களை யும் நியாயமானவர்களாகக் காட்டுவதாகத் தான் முடியும்.

பீச்சரின் விசாரணை அல்லது, ஏழுவருடச் சித்திர வதைக்குப் பின்னர் ஸாக்கோவையும் வான் ஸெட்டியை யும் கொலைபுரிந்தது போன்ற 'தற்காப்பு முயற்சிகள்' விலக்கமுடியாத அழிவிலிருந்து முதலாளி வர்க்கத்தைப் பாதுகாக்க முடியாது; ஆனால் அதன் மீதுள்ள வெறுப்பை மேலும் அதிகமாக்கி, அதனுடைய வீழ்ச்சியைத் துரிதப் படுத்தவே துணைபுரியும். இந்த உண்மையை முதலாளி வர்க்கம் ரொம்ப காலத்துக்கு முன்பே உணர்ந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.

இனி தருவதற்கு, எதுவும் முதலாளிவர்க்கத்திடம் இல்லை. தொழிலாளி மக்களை அடிமைத் தளையில் பூட்டி வைத்திருப்பதற்கு முன்பு அதற்கு உதவியாக இருந்த வழிவகைகள் இப்போது அதனிடம் கிடையாது. அதனுடைய பழிபாவங்களை நியாயமானவையாக மாற்றிக் காட்டக்கூடிய மதமோ. சித்தாந்தமோ அதனிடம் கிடையாது.

அதற்கு இன்னும் பலம் அளித்துக் கொண்டிருக்கும் ஒரே ஒரு விஷயம், அதனுடைய தொழில்களையும், தொழிற் கலைகளையும் வளம் படுத்துகின்ற விஞ்ஞான சக்திகளைப் பாவத்துக்கு அஞ்சாத வகையில் அது தன்னலச் செயல் களில் ஈடுபடுத்தி வருவது தான்.

ஆனால், அது கூட வெகு காலம் நீடிக்காது. விஞ்ஞான அறிஞர்கள் பிறரைவிட அதிகமான நுண்ணறிவு உடைய வர்கள். ஆகவே, புல்லுருவிகளுக்கும் அட்டைகளுக்கும் உழைத்துக் கொண்டிருப்பதனால், தாங்கள் 'கலாசார' த்துக் காகப் பாடுபடவில்லை; ஆனால் மக்களின் அழிவுக்கும் தங்களுடைய சொந்த நன்மைகளின் அழிவுக்குமே செயல் புரிகிறோம் என்று உணர்ந்து கொள்ளும் நிலையை அவர்கள் சீக்கிரமே அடைவார்கள்.

*ஜோனெஸ் பீச்சரின் விசாரணையை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யும்படி, நேர்மையான ஆண்கள் பெண்கள் அனைவரையும் நான் வேண்டுகிறேன். அவருடைய ஒரே குற்றம் அவர் யோக்கியராகவும், திறமைசாலியாகவும் இருப்பது தான்!* *(1928)*

# முதலாளித்துவ பத்திரிகைகள்

பழைய புத்தகக் கடைகளில் காணப்படுகிற கழிவுக் காகிதங்கள் எல்லாம், இறந்த காலத்தில் மக்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்பதை எடுத்துச் சொல்லும். இன்று மக்கள் எவ்விதம் வாழ்கிருர்கள் என்பதை உணர்வதற்கு செய்தித் தாள்களில் வருகிற விளம்பரங்களும், போலீஸ் செய்திகளும் நன்கு துணைபுரியும். செய்தித்தாள்கள் என்று நான் கூறுகிறபோது, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள 'கலாசார நகரங்களில்' இருக்கின்றனவே, அவற்றிலுள்ள 'பொது மக்களின் அறிவு அபிவிருத்திக்கான சாதனங்களை'த்தான் குறிப்பிடுகிறேன். தங்கள் எஜமானர்களைப்பற்றி வேலைக்காரர்கள் ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லக் கூடிய விஷயங்களைக் கேட்பதைப் போலவே, முதலாளித்துவ பத்திரிகைகளைப் படிப்பதும் பயன் அளிக்கும் என்று நான் கருதுகிறேன். ஆரோக்கியமாக இருக்கின்ற ஒருவனுக்கு வியாதிகள் சுவாரஸ்யமான விஷயங்களாகத் தோன்ற முடியாது; தோன்றவும் கூடாதுதான். ஆனல் அவற்றைப் பற்றிக் கற்றறிய வேண்டியது டாக்டரின் கடமையாகும். வைத்தியனுக்கும் பத்திரிகையாளனுக்கும் பொதுவான அம்சங்கள்

சில உண்டு. அவ் இருவரும் வியாதிகளை நிர்ணயம் செய்து, அவற்றை விவரிப்பதில் ஈடுபடுகிறார்கள். முதலாளித்துவ பத்திரிகைக்காரர்களைப் பார்க்கிலும் நமது பத்திரிகையாளர்கள் உயர்ந்த நிலையில் இருக்கிறார்கள். ஏனெனில், சமுதாய வியாதி விஷயங்களுக்கு உரிய பொதுவான காரணங்களை அவர்கள் நன்கு அறிவார்கள். நோயாளி ஒருவனின் அலறல்களையும் முனகல்களையும் வைத்தியன் எவ்வாறு கவனிப்பானோ, அதே மாதிரித்தான் சோவியத் பத்திரிகையாளனும் முதலாளித்துவ பத்திரிகைகளின் சாட்சியங்களை சிரத்தையோடு கவனிக்க வேண்டும். நம் நாட்டில் உள்ள திறமைசாலிகளில் எவராவது முன் வந்து, ஏதாவது ஒரு 'கலாசார நகர'த்திலிருந்து வெளிவரும செய்தித் தாள்களில் காணப்படுகிற போலீஸ் செய்திகளிலிருந்து போதுமான விவரங்களைச் சேகரித்துக் கொண்டு, சில்லறைக் கடைகள், உணவு விடுதிகள், கேளிக்கை நிலையங்கள் முதலியவற்றின் விளம்பரங்களோடும், சபைக் கூட்டங்கள், வரவேற்புகள், பொது விழாக்கள் முதலியன பற்றிய வர்ணிப்புகளுடனும் அவற்றை ஒத்துப் பார்த்து அவர் அவ் விவரங்களை எல்லாம் கொண்டு ஆராய்ச்சி நடத்தினால், இன்றைய முதலாளித்துவ சமுதாயத்தின் கலாசார வாழ்க்கை பற்றிய மயக்கத்தையும் அதிர்ச்சியையும் அளிக்கக்கூடிய சித்திரத்தை நமக்கு அளிக்க முடியும்.

முதலாளித்துவ பத்திரிகைகளில் தினந்தோறும் நாம் காண்பது என்ன? கடந்த மே மாதந்தில் அவை லேசாகத் தொட்டு ஒதுக்கிய சில செய்திகளை இதோ உதாரணத்துக்குக் கொடுக்கிறேன்.

"சிறுவர் சிறைச் சாலையில் குழப்பம்"—இளம் வயதுக் குற்றவாளிகளைச் சீர்திருத்தும் சிறையிலிருந்து

பதினன்கு பையன்கள் தப்பி ஓடிவிட்டார்கள். அவர்களில் பன்னிரண்டு பேரை குதிரைப் படைவீரர்கள் மீண்டும் பிடித்து விட்டார்கள். மற்றுமுள்ள இருவரின் இருப்பிடம் தெரியவில்லை. "மற்றுமொரு சிறு பிள்ளை சித்திரவதை செய்யப்பட்டது." "தாய் தன் குழந்தைகளைக் கொன்ருள்.," — இரண்டு குழந்தைகளுக்கும் விஷவாயுப் பிரயோகம். காரணம், பட்டினிதான். "விஷவாயுவால் மரணம்-மற்றுமொரு நிகழ்ச்சி."—கணவன், மனைவி, கணவனின் வயோதிகத் தாய், மூன்று வயசுப் பெண், கைக் குழந்தை ஒன்று ஆகிய ஐந்து பேர் மூச்சு முட்டிச் செத்தார்கள். "பசி, கொலை வெறியைத் தூண்டி விட்டது" "மற்றுமொரு பெண் துண்டு துண்டாக வெட்டப்பட்டாள்." "சிறைவாசம் பிடித்து விட்டது!"—ஐந்து வருடங்கள் சிறைத் தண்டனை அனுபவித்த ஒருவன் விடுதலையான உடனே போலீஸ் முன் ஆஜராளுன். தனக்கு வியாதி என்றும், தன்னால் வேலை எதுவும் செய்ய முடியாது என்றும், தான் பிச்சை எடுக்க விரும்பவில்லை என்றும் முறையிட்டு, மீண்டும் தன்னை ஜெயிலில் அடைத்து விடும்படி கோரினன். முதலாளித்துவ அரசாங்கத்தின் 'நியாய பூர்வமான சட்டங்கள்' இதை அனுமதிப்பதில்லை! ஆகவே, ஜெயிலில் 'பழகிப் போன' அந்த ஆசாமி வெளியே செல்கிருன். ஒரு கடையின் சன்னல் கண்ணுடியை உடைத்தெறிகிருன். போலீசுடன் சண்டை பிடிக்கிருன். இந்த விதமாக. அவன் தான் விரும்பியதைப் பெற்று விடுகிருன். "லட்சாதிபதிப் பிச்சைக்காரன்"— எண்பது வயதான கிழட்டுப் பிச்சைக்காரன் ஒருவன் இறந்து போகிருன். அவன் விட்டுச் சென்ற பொருள்களில் ஐம்பது லட்சம் வெள்ளி நாணயங்களும் காணப்பட்டன.

"ஆஷ்டன் பிரபு 89 – வயதில் செத்துப் போனர். அவருக்கு 2 கோடிப் பவுன்கள் சொத்து இருக்கிறது."

"பயங்கரமான பரிசோதனை" - லியான்ஸ் நகரில் முந்நூறு பேர் இறந்து போனார்கள். நகர தண்ணீர் விநியோகக் குழாய்களில் ஓடும் அசுத்தமான தண்ணீரைக் குடித்தது தான் காரணம். "சிட்டாட்டத்தில் மகத்தான நஷ்டம்." "நகரின் பல பகுதிகளில் அநேக கொலைகள் நிகழ்ந்துள்ளன. கொள்ளைக்காரர்கள் சௌகர்யமாய் தப்பி ஓடி விட்டார் கள்." இங்கு 'சௌகர்யமாய்' என்கிற பதம் கிண்டலாகக் கருதப்படுவதற்கில்லை. கொலைகாரர்கள் தப்பியோடுவதில் அக்கறை கொண்டவர்களின் அனுதாபமாகவே இதனைக் கொள்ள வேண்டும்.

இன்னும் ஏமாற்று, லஞ்சச் சீர்கேடுகள், காமவக்கிர குணங்களால் தூண்டப்பட்ட தற்கொலை - கொலை சம்பந்த மான வழக்குகளைப் பற்றிய செய்திகள். உண்மையில், இந்த ஒரு மாத காலத்தில் பிரசுரிக்கப் பெற்ற செய்தி களிலிருந்து மிகவும் குறைவான அளவு தான் நான் தேர்ந் தெடுத்துக் கொடுத்திருக்கிறேன். மீதமுள்ளவற்றிலும் தொண்ணூறு சதவிகிதம் இதே ரகமான குற்றங்களையும் குற்றப்போக்குகளையும் பற்றிய செய்திகளே யாகும். அவை எல்லாம் மிகச் சுருக்கமாகவும், ஒழுங்காகவும், வர்ணப்பூச்சு எதுவும் இல்லாமலும் தான் கூறப்பட்டிருக் கின்றன. பத்திரிகையாளர் தனது நடைக்குக் கொஞ்சம் உணர்ச்சியோ, பூச்சுமானமோ சேர்க்க வேண்டுமானால், முற்றிலும் புதிய கொடூரமான முறையில் 'மற்றுமொரு இளம் பெண்' வெட்டி வதை செய்யப்பட வேண்டியது அத்தியாவசியம் ஆகும். அல்லது இது போன்ற ஒரு 'பலே செய்தி' தேவை: டூஸல்டார்ப் நகரவாசியான கொலை காரன் கூர்ட்டன் (இவன் ஒரு தொழிலாளி) என்பவன், தான் 53 குற்றங்களைச் செய்திருப்பதாக முதலில் வாக்கு மூலம் கொடுக்கிறான். பிறகு, "எல்லாம் சும்மா விளையாட் டாகச் சொன்ன வெறும் பேச்சு என்று இவை

முழுவதையும் நான் மறுத்துவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்?'' என்று உணர்ச்சியற்ற குரலில் அவன் போலீஸ் அதிகாரியிடம் கேட்டான். இவை போன்றவை தான் பரபரப்பான செய்திகள் ஆகும். ஆனால், முதலாளித்துவ நாடுகளில் போலீசார் செய்கிற வேலைகள் எல்லாமே பரபரப்பான விஷயங்களின் தொடர்ச்சிகளாவே அமைவதால், கூர்ட்டனின் விவகாரம் சோவியத் வாசகருக்கு வியப்பு அளிக்காது தான். இவை எல்லாம் ஏன் பிரசுரிக்கப் படுகின்றன என்பதை நாம் புரிந்துகொள்ளவே முடியவில்லை. போலீஸ் செய்திகளின் மீது முதலாளித்துவ பத்திரிகைகள் எவ்விதமான 'விளக்க உரை' எழுதுவதுமில்லை. அவை சர்வசாதாரணமாகி விட்டன. ஆகவே அவற்றினால் யாரும் கோபமோ கொதிப்போ கொள்வதில்லை போலும் என்ற உணர்வு தான் நமக்கு ஏற்படுகிறது. முன்பெல்லாம், 1914 – 18 யுத்தத்துக்கு முன்பு, மக்கள் கொதிப்படைந்து கொண்டிருந்தார்கள். உணர்ச்சிவசப்பட்ட தனி மனிதர்கள் சிலர் 'சமுதாய அமைப்பின் சீர்கேடுகள்' பற்றி, தொட்டும் தொடாமலும் கட்டுரைகள் எழுதுவது வழக்கம். அவர்கள் பலவிதமான கருத்துக்களையும் வெளியிடுவார்கள். சில சமயம் அச்சத்தினால் தூண்டப்பட்ட அபிப்பிராயங்களாக இருந்திருக்கலாம் அவை. ஆனால் அநேகமாக, 'விபரீத நிகழ்ச்சி' களால் அமைதி குலையப் பெற்று விட்ட 'பண்பாடு உடைய பெரியவர்'களின் எரிச்சல் காரணமாகத் தான் அவை பிறந்திருக்கும்.

தற்காலத்தில், வாழ்வின் சகஜமான துயரச் செய்திகளில் முதலாளித்துவ பத்திரிகைகளுக்குச் சிரத்தையே கிடையாது. ஏனெனில் தினந்தோறும் நூற்றுக்கணக்கான அப்பாவி மனிதர்கள் செத்துப் போவது வழக்கமான நியதியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு எவ்வளவோ காலம் ஆகிவிட்டது. வாழ்வின் போக்கிற்கு அது எவ்விதமான

கேடும் விளைவிப்பதில்லை. ஆனந்தமாகவும் அமைதியாகவும் வாழ விரும்புகிறவர்களுக்கு அது எத்தகைய ஆபத்தையும் உண்டாக்குவதில்லை. டாம்பீகமான சினிமாக்கள் நாள் தோறும் பெருகிக்கொண்டே இருக்கின்றன. மேலும் அதிக ஆடம்பரமான சிற்றுண்டிச் சாலைகள் பெருகுகின்றன. அவற்றின் சுவர்களையும் கூரைகளையும் நடுங்க வைக்கும்படி பேரொலி எழுப்பும் இசைக் கருவிகள் ஓயாது முழங்கிக் கொண்டிருக்கின்றன. 'குன்றிப் போன வீரியத்துக்கு' மாற்றாக அமையும் மருந்துகள் பற்றிய ஏராளமான விளம்பரங்களைக் காண வியப்புத்தான் உண்டாகிறது. அதேபோல், மேக நோய்களைத் தீர்க்கும் வைத்தியர்களின் விசேஷமான சொல் அலங்கார விளம்பரங்களைக் கண்டும் வியப்படைகிறோம்.

இத்தகைய பரபரப்பான விஷயங்கள் எல்லாம் 1914-ம் வருஷத்துக்கு முன்பு கூட இருந்தனவே என்று நீங்கள் சொல்லலாம். உண்மை. ஆனாலும் அன்று இவ்வளவு ஆரவாரமாக இருந்ததில்லை அவை. இப்பொழுது 'கலாசார நகரங்களில்' உள்ள முதலாளிகள் எல்லோரும் கூடி,

தேய்ந்து குறையுது வாழ்வு
வேகமாய் ஓடுது காலம்;
பகல் என்றும் பாராமல்
இரவு என்றும் சோராமல்,
பெறுவோம் இன்பம் இன்பமே!

என்று ஏகமனதாகத் தீர்மானித்து விட்டார்கள் என்றே தோன்றுகிறது.

நீண்ட ஒல்லிக் கால்களும், துருத்திய வயிறும், கனமாக வர்ணம் பூசப்பட்ட கன்னங்களும், 'கஞ்சா அப்பவன்' என்று காட்டும் வெறிக் கண்களும் பெற்றிருந்த

ஆசாமி ஒருவனால், உல்லாச உணவு விடுதி ஒன்றின் நாட்டிய மேடை மீதிருந்து, இது 'உபதேசிக்கப்பட்டது'.

நான் அளவுக்கு அதிகமாகக் காரசாரமாக இதைக் குறிப்பிடுகிறேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அப்படிச் செய்யும் ஆசை எனக்குக் கிடையவே கிடையாது; ஏனெனில், அந்த வறண்ட ஊழல், தொத்து நோய் விளைவிக்கும் என்பதை நான் அறிவேன். வாழ்வின் வர்ணங்கள் தாமாகவே அழுத்தம் பெற்று, அதிக கோரமாக உறுத்தத் தொடங்கி விட்டன. ஒரு வேளை, வாழ்க்கையின் வேகம் அதிகரித்து விட்டதே இதற்குக் காரணமாக இருக்கலாம். முதலாளிகளின் உல்லாச உணர்வு ஜுர வேகத்தில் வளர்ந்து வருவதும் காரணமாகலாம்... தங்கள் வர்க்கத்தை எதிர் நோக்கி வருகின்ற நிச்சயமான அழிவை உணர்த்தும் இருண்ட முன்னெச்சரிக்கையை மறக்கடிப்பதற்காகவே முதலாளிகள் உல்லாசமாக வாழ முயல்கிறார்கள்.

* * *

அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் உள்ள பத்திரிகையாளர்களின் அலுவல் பற்றி நான் நன்கு அறிவேன். அவர்களைச் சில்லறைப் பொருள்களைத் தெருவில் விற்பவர்களாக நான் கருதுகிறேன். அவர்களுடைய கடுமையான ஓய்வற்ற பத்திரிகைத் தொழில் மனிதர்கள் மீது அவர்களுக்கு ஆழ்ந்த அசிரத்தையை உண்டாக்கி விடுகிறது. அவர்கள் மனநோய் மருத்துவ சாலையில் வேலை பார்க்கும் பணியாட்களைப் போலவே காணப்படுகிறார்கள்; அப்பணியாட்கள் நோயாளிகளையும் டாக்டர்களையும் பைத்தியங்களாகக் கருதுவதற்குப் பழகி விட்டார்கள். வாழ்க்கையின் மிகவும் வேறுபாடான அம்சங்களைப் பற்றி அவர்கள் எழுதும் குறிப்புகளில் உணர்ச்சியே காணப்

படாமலிருப்பதற்கு இந்த அசிரத்தை தான் காரணம் ஆகும்.

இதோ சில உதாரணங்கள்;

"ஹான்ஸ் முல்லர் என்கிற ஒருவன் நேற்று பந்தயம் கூறி 11 நிமிஷங்களில் 36 ஜோடி மசாலையிட்ட கறி உருண்டைகளை தின்று தீர்த்தான்."

"1928-ம் ஆண்டில் பிரஷ்ய நாட்டில் தற்கொலை செய்து கொண்டவர்களின் எண்ணிக்கை 9,530 ஆகும். இவர்களில் 6,690 ஆண்கள். 2,840 பெண்கள். தற்கொலை செய்து கொண்டவர்களில் 6,413 பேர் நகரங்களிலும், 3,117 பேர் நாட்டுப்புறங்களிலும் வசித்தவர்கள்."

"சைலீஷியா தேசத்தில் உள்ள லோவன் பெர்க் நகரத்தின் மேயர் நகர வருமானத்தை அதிகப்படுத்துவதற்காக பூனைகள் மீது வரி விதிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். ஆனால் நகரசபை அத் தீர்மானத்தை நிராகரித்து விட்டது. ஆகவே, மேயர் வேறொரு உத்தியைக் கையாண்டு வருகிறார். நகரத்தின் பூங்காவில் திரிகிற பூனைகளைப் பிடிப்பதற்காக அங்கங்கே பொறிகள் வைக்கும்படி அவர் ஏற்பாடு செய்திருக்கிறார். பொறியில் சிக்குகிற பூனைகளை மீட்க விரும்புகிற சொந்தக்காரர்கள், பூனை ஒன்றுக்கு மூன்று பணம் வீதம் அபராதம் கட்டியாக வேண்டும்."

"ஹாம்பர்க் நகருக்கு அருகில் உள்ள நீயன்டோர்வ் வட்டாரத்தில், நீர்ப்பாசனக் கம்பெனிக்குத் தர வேண்டிய பாக்கிப் பணத்துக்கு ஈடாக, சொத்துக்களைப் பறிமுதல் பண்ணுவதற்காக அதிகாரிகள் வந்த போது, குடியானவர்கள் ஆயுதம் தாங்கி அவர்களைத் தாக்கினார்கள். அந்த அதிகாரிகள் ஓடிப் போக வேண்டிய அவசியம் ஏற்பட்டது."

*"பெர்லின் நகருக்கு அருகாமையில் வசிக்கும் போதகர் ஒருவரைக் காண 'அர்த்த ராத்திரிப் பிசாசு' ஒன்று வழக்கமாக வந்து போகிறது. அதனுடைய 'அசுத்தமான ஸ்பரிசத்தினுல்' அந்தப் போதகர் மூன்று தடவை விழித்தெழ நேர்ந்தது. ஆகவே, அவர் போலீசாரின் உதவியை நாடினுர். அவர்கள் வந்து பரிசோதித்த போது, அவர் வீட்டு ஜன்னலின் கீழ் ஒரு தொப்பியைக் கண்டு எடுத்தார்கள். அது அந்தப் 'பிசாசு' தவற விட்ட தொப்பியாகத்தான் இருக்க வேண்டும் என்று யூகிக்கப்படுகிறது."*

*"கத்திரித்து விடப்பட்ட கூந்தலை உடைய பெண்களை மாதா கோயிலின் பிரார்த்தனைக் கூட்டத்துக்கு அனுமதிக்கலாமா? அநேக அத்தியட்ச குருமார் (பிஷப்) இந்தப் பிரச்னையைக் கிளப்பியதனுல் மே மாதம் 24-ம் தேதியன்று புனித போப்பாண்டவர் இவ் விஷயம்பற்றி ஆலோசனை நடத்தினுர். திருச் சபையினர் சாதகமான அபிப்பிராயமே அறிவித்துள்ளனர். பெண்கள் தங்கள் தலைமயிரைக் குட்டையாக வெட்டிக் கொள்வது தருமத்துக்கு விரோதமானது அல்ல என்றே அவர்கள் கருதுகிருர்கள்."*

*"ஆண்டு தோறும் பிரான்ஸ் தேசத்தில் சுமார் நாலாயிரம் பெண்கள் காணுமல் போய் விடுகிருர்கள்" என்று சென்ற வருடம் ஒரு பத்திரிகை நிருபர் குறிப்பிட்டிருந்தார். பிரெஞ்சு நகரங்களில் பெண்களை விபசாரத்தில் ஈடுபடுத்துகிறவர்கள் பலர் சமீபத்தில் கைது செய்யப்பட்டனர். இந்தக் குழுவினர் தென் அமெரிக்கக் குடியரசுகளில் உள்ள விபசார விடுதிகளுக்கு 2,500 பெண்களை விற்பனை செய்திருக்கிருர்களாம். இவ்வாறு பெண்களை 'வாணிபப் பொருளாக' மாற்றி விற்பனை செய்யும் கோஷ்டிகள் போலந்து நாட்டிலும் வெற்றிகரமாகத் தொழில்*

புரிவதாகத் தெரிய வந்தது. அடிமை வியாபாரத்தின் இந்தத் துறை பற்றி ஏ. லோந்த்ரே எனும் பிரஞ்சுப் பத்திரிகையாளர் ஒருவர் விரிவான ஆராய்ச்சி செய்திருக்கிறார். 'கிரிமினல் ட்ரேட்' (கயமை வாணிபம்) என்ற பெயரில் அவர் எழுதியுள்ள புத்தகத்தை நம் நாட்டில் 'தி பெடரேஷன் பப்ளிஷிங் ஹவுஸ்' எனும் ஸ்தாபனம் பிரசுரம் செய்திருக்கிறது. அது மிகவும் சுவாரஸ்யமான புத்தகம் ஆகும். பெண்களை எவ்வாறு வசப்படுத்தி, கள்ளத் தனமாகக் கடத்திச் செல்கிறார்கள்; அர்ஜண்டைனவில் உள்ள விபசார விடுதிகளில் பெண்கள் 'வேலை' செய்யும் விதம் முதலியன பற்றி இந்தப் புத்தகம் விரிவாக எடுத்துச் சொல்கிறது. ஆனால் அநியாயத்தைத் கண்டு சீறும் ஆவேசம் ஒரு சிறிது கூட இப் புத்தகத்தில் காணப்படவில்லை; இது தான் சிந்தனையைத் தூண்டும் முக்கிய விஷயமாகும்.

விபசாரத்துக்கு ஆள் பிடித்துக் கொடுக்கும் ஒரு ஆசாமியைச் சந்தித்தது பற்றி, 10-ம் பக்கத்தில் லோந்த்ரே இவ்வாறு எழுதுகிறார்.

"ஆர்மண்ட் ஒரு தரகன் தான் ...... அவன் தொழில் என்ன என்பதை நான் அறிவேன். நான் யார் என்பது அவனுக்கும் தெரியும். அவன் என்னை நம்புகிறான். நானும் அவனை நம்புகிறேன்-பரஸ்பரம் வியாபாரிகளைப் போல."

அது தான் உண்மை ;- "வியாபாரிகளைப் போல." ஆம்; அது வியாபாரத்தைத் தவிர வேறெதுவும் இல்லை. மனச் சாட்சியின் பிரகாரம் அந்த 'வியாபாரம்' மனிதத் தன்மை குன்றியதாகவும் மிகவும் இழிவானதாகவும் இருப்பினும் பாதகமில்லை இவர்களுக்கு.

ஆயினும், லோந்த்ரேயின் மனப்பண்பைத் தெளிவு படுத்துவதற்கு, அமெரிக்கப் பத்திரிகையாளர் ஒருவரின் வார்த்தைகளை அப்படியே மேற்கோளாகக் காட்டுவது தான் பொருத்தமாக இருக்கும்:-

"அவன் ஜெயிலுக்கு அழைத்துச் செல்கிற மனிதன் குற்றமற்றவனா இல்லையா என்பதைப் பற்றிக் கவலைப் பட வேண்டியது போலீஸ்காரன் கடமை அல்ல. சமூகம் என்கிற நீதிமன்றத்தின் முன்னர் நானும் அதே ரக ஆசாமி களைத் தான் கொண்டு வந்து நிறுத்துகிறேன். முன்பு நடந்தது என்ன, இனி நடக்க இருப்பது என்ன என்பதை யோசிக்க வேண்டியது என் பொறுப்பு அல்ல."

1906-ம் ஆண்டில் நியூயார்க் நகரத்தில், அமெரிக் காவுக்கு இகழ்ச்சியுண்டாகும் சம்பவம் ஒன்று நடந்தது. அப்போது தான் நான் இதைக் கேள்விப்பட்டேன். இரண்டு ஓட்டல்களிலிருந்து நான் வெளியேற்றப்பட் டேன். எனவே, நான் எனது பெட்டிகளோடு நடுத் தெரு வில் நிலையாக அமர்ந்து விட்டேன். என்னதான் நடக் கிறது என்று பார்க்கலாமே எனக் காத்திருக்கவும் தீர் மானித்தேன். பத்திரிகை நிருபர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். சுமார் பதினைந்து பேர் இருப்பர். அவர்கள் சொந்த முறைப்படி — அமெரிக்க மதிப்புப்படி— அவர்கள் எல்லோரும் நல்லவர்கள் தான். என்னிடம் அவர்கள் 'அனுதாபம்' காட்டினார்கள். அந்தச் சம்பவம் காரணமாக அவர்கள் குழப்பம் கூட அடைந்திருந்தனர் என்று நான் எண்ணினேன். அவர்களில் ஒருவன் விசேஷமாக விரும்பத்தக்கவனாய்த் தோன்றினான். பருமனான ஆசாமி அவன். உணர்ச்சிகளைப் பிரதிபலிக்காத முகமும், வேடிக்கையான உருண்டைக் கண்களும் அவனுக்கு இருந்தன. பாசிமணி போன்ற அவனது நீலநிறக் கண் களில் அபூர்வமான பேரொளி நிறைந்திருந்தது. அவன் புகழ்பெற்ற நபரும் கூட. ஒரு சமயம், பிலிப்பைன் தீவில் உள்ள மணிலாவில், ஸ்பானியர்களால் சிறைப்படுத்தப் பட்டிருந்த தேசீய்வாதியான மரணதண்டனை விதிக்கப் பட்ட ஒரு புரட்சிக்காரியை மீட்டு வரும்படி அவனை

அவனது பத்திரிகை அனுப்பி வைத்தது. இந்தச் சம்பவத்தை அதன் போக்கிலே விட்டுவிட நான் முற்றிலும் தயாராக இருக்கிறேன் என்பதை அந்த ஆசாமி ஊகித்து அறிந்துகொண்டான். லீராய் ஸ்காட் என்கிற இளம் எழுத்தாளரையும்—'தி வாக்கிங் டெலிகேட்' (நடமாடும் பிரதிநிதி) எனும் நாவலின் ஆசிரியர் இவர் — 'ஃபைவ் கிளப்' என்ற சங்கத்தைச் சேர்ந்த அவருடைய தோழர்களையும் 'இந்த விவகாரத்தைக் கவனித்து ஏதாவது செய்யும்படி' அவன் வற்புறுத்தினுன். அவர்கள் அவ்விஷயத்தில் எதுவும் செய்ய முடியவில்லை என்பது பின்னர் தெளிவாயிற்று. ஆயினும், நான் தெருவிலிருந்து 'கிளப்' கட்டிடத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். இலக்கிய முயற்சியில் ஈடுபட்டிருந்த ஐந்து பேர் அந்த இடத்தில் வசித்து வந்தார்கள். லீராய் ஸ்காட்டின் மனைவியான ரஷ்ய யூத மங்கை தான் மனைத்தலைவியாகப் பணி புரிந்தாள். 'கிளப்'பின் விசாலமான முன்னறையில் கணப்பின் முன்னுல் ஐந்து இளம் எழுத்தாளர்களும் தினந்தோறும் மாலை நேரத்தில் கூடுவது வழக்கம். நிருபர்கள் வந்தார்கள். நான் அவர்களிடம் ரஷ்ய இலக்கியம், ரஷ்யப் புரட்சி, மாஸ்கோ மக்களின் எழுச்சி ஆகிய விஷயங்களைப் பற்றிப் பேசினேன். (போல்ஷ்விக் மத்தியக் கமிட்டியைச் சேர்ந்த என். ஈ. புரெனின், ஸ்காட்டின் மனைவி, எம். எப். ஆண்ட்ரீயீவா ஆகியோர் என் பேச்சை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொன்னுர்கள்.) பத்திரிகைக்காரர்கள் சிரத்தையோடு கேட்டார்கள்; குறிப்புகள் எழுதிக்கொண்டார்கள்; வருத்தத்தைக் காட்டும் வகையில் பெருமூச்செறிந்தார்கள். "இதெல்லாம் ரொம்பவும் சுவையாக இருக்கிறது—ஆனுல் இது எங்கள் பத்திரிகைக்கு ஏற்ற விஷயம் அல்ல" என்று சொன்னுர்கள்.

புதுயுகத்தின் வருங்காலத்தை நன்கு பிரதிபலிக்கும் இவ்வுண்மை நிகழ்ச்சிகளை அவர்கள் பத்திரிகைகளில் ஏன் பிரசுரிக்கக் கூடாது என்று நான் கேட்டேன்.

ஆனால், எனது கேள்வியை அவர்கள் அவர்களுக்கே உரிய சாதாரண முறையில் – அது என்னவோ முற்றிலும் சொந்த விஷயம் என்பது போல் – தான் புரிந்து கொண்டார்கள். அவர்கள் சொன்னது இது தான்:

"நாங்கள் எல்லோரும் உங்கள் பக்கம் தான். என்றாலும் இவ் விஷயத்தில் நாங்கள் எதுவும் செய்வதற்கில்லை. புரட்சிக்கு உதவியாக நீங்கள் இங்கே பணம் திரட்ட முடியாது; சம்பாதித்துச் சேர்க்கவும் முடியாது. ரூஸ்வெல்ட் உங்களை வரவேற்க எண்ணியிருக்கிறார் என்ற செய்தியை பத்திரிகைகள் பிரசுரித்த உடனேயே, இங்குள்ள ரஷ்ய ஸ்தானிகர் தலையிட்டு விட்டார். அத்துடன் உங்கள் காரியத்துக்கு ஒரு முடிவு ஏற்பட்டு விட்டது. பத்திரிகைகள் பிரசுரித்தது ஆண்ட்ரீயீவாவின் படம் அல்ல என்பதை நாங்கள் கண்டு கொண்டோம். உங்கள் முதல் மனைவியும் குழந்தைகளும் வறுமையில் வாடி வதங்கவில்லை என்பதையும் நாங்கள் அறிகிறோம். இருந்தாலும் கூட, இதை அம்பலப்படுத்துவதற்கு வேண்டிய சக்தி எங்களிடம் இல்லை. புரட்சிக்கு ஆதரவு தேடி நீங்கள் இங்கே உழைப்பதை அவர்கள் அனுமதிக்க மாட்டார்கள்."

"ஆனால் பிரெஷ்கோவ்ஸ்காயாவை ஏன் அனுமதித்திருக்கிறார்கள்?"

இதற்கு அவர்கள் பதில் சொல்லவில்லை. அவர்கள் எண்ணம் தவறாகவே முடிந்தது. நான் எதிர்பார்த்த அளவை விடக் குறைந்த வேலையே செய்ய முடிந்தது.

என்ருலும், நான் சேவை புரிவது சாத்தியமாகத் தான் இருந்தது. (ஆனால் இந்தக் கட்டுரை விஷயத்துக்கும் அதற்கும் எவ்விதமான சம்பந்தமும் கிடையாது.)

நியூயார்க் பத்திரிகைகளின் ஆச்சர்யகரமான ஆற்றலைப் பற்றி எனக்கு விளக்குவதில் அந் நிருபர்கள் முனைந்தார்கள். அவர்கள் சில உதாரணங்கள் தந்தார்கள். செல்வமும் செல்வாக்கும் பெற்ற பரோபகாரியான ஒரு சீமாட்டியை ஒரு பத்திரிகை குற்றம் சாட்டியது. அந்த அம்மையார் அநேக விபசார விடுதிகளை நடத்தி வருவதாக அது எழுதியது. முதல் தரமான 'பலே செய்தி'யாக விளங்கியது இது. ஆனால் இரண்டு நாட்களுக்குப் பிறகு இதே பத்திரிகை, இருபத்தைந்து போலீஸ்காரர்களின் படங்களைப் பிரசுரித்தது. ரகசியமாக விபசார விடுதிகளை நடத்துபவர்கள் அவர்கள் தான் என்றும், முன்பு குறிப்பிடப்பட்ட மிகுதியும் கண்ணியம் வாய்ந்த அம்மையார் அல்ல என்றும் எழுதியது.

"போலீஸ்காரர்கள் விஷயம் என்ன ஆயிற்று?"

"அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டார்கள். ஆனால் அதற்கு முன்பு அவர்களுக்குப் போதுமான நஷ்டஈடு அளிக்கப்பட்டு விட்டது. அவர்கள் வேறு மாகாணங்களில் வேலை தேடிக் கொள்வார்கள்."

மற்றுமொரு உதாரணம்: குறிப்பிட்ட ஒரு செனேட்டரின் மதிப்பைக் குறைத்தாக வேண்டும் எனும் அவசியம் ஏற்பட்டது. அவர் தனது இரண்டாவது மனைவியோடு சுமுகமாக வாழவில்லை என்றும், மாணவர்களான அவருடைய பிள்ளைகள் மாற்றாந் தாயுடன் சச்சர விட்டுக் கொண்டிருப்பதாகவும் ஒரு பத்திரிகை கதை கட்டி விட்டது. பெரியவரும் அவர் பிள்ளைகளும் அச் செய்தியை

மறுத்துக் கடிதம் எழுதினர்கள். அதையும் அந்தப் பத்திரிகை பிரசுரித்தது. ஆனல் அது சம்பந்தமாகக் கேலிக் குறிப்பும் தீட்டியது. அந்த செனேட்டர் வசித்த வீட்டைப் பத்திரிகை நிருபர்கள் முற்றுகையிடலானர்கள்...

*( கார்க்கி இக் கட்டுரையைப் பூர்த்தி செய்யவில்லை.)*

*1930*

ஸ்ரீ லெக்ஷ்மி பிரஸ், திருநெல்வேலி ஜங்ஷன்.